# பிரகரண அட்டவணை.





ஆறு பிரகரணம் - ௬.

பிரகரண அட்டவணை முற்றிற்று.



சேலஞ்சில்லா சிவில்கோர்ட்டு-வக்கீல்

ம-௱-௱ - அப்பாசுவாமிபிள்ளையவர்களியற்றியது.

கட்டளைக்கலித்துறைகள்.

திருவேதநிறைந்து வளர்சென்னைமேவுந்தெருண்மிகுசற் *
குருவேமுனிபப்பக்கோவேமுமூட்சுக்குழாங்கள்பவப் .. *
பெருவேலைநீந்த நவநீதசாரத்தைப் பேசுமப்பிற் ....... *
பரிவோடுமெச்சிற்பதிவுறச்செய்ததென்பாக்கியமே....... *

கற்றவரோயந்திமற்றெம்மனோருங்கதியடைய.......... ..... *
முற்றறிவாளன் முனிபப்பந்தசிவன் மோகவிருட்.......... *
செற்றங்கடியு நவநீதசாரத்தைக் கூறுமகப் ............... .... *
பெற்றற்றவர்புகழ் மெய்ஞ்ஞானவசிற் பதித்தனனே ..... *



உ

ஸ்ரீசற்குருவேநம.

# நவநீதசாரம்.

## காப்பு-பாயிரம்,

( விநாயகர் வணக்கம். )

ஆரணமுதலாய்ச்சொல்லு மாகமமனைத்துந்தோற்றும் ※
வாரணமுகனென்றானை வணங்கின்முக்கரணத்தாலுங் ......※
காரணவறிவின்கணாய்க் கற்பனைகடந்தஞான ........ ※
பூரணசுகவதீத போதமங்கருளுந்தானே ..................※

அருளிறைவணக்கம். [ணதீ

சொப்பிரகாசவகண்டிதநிசமாஞ் சோதியாய்நிறைந்தமெய்ஞ்ஞா
னற்பரமானசிவமெனுமிரண்டற்றுமேகமாய்க் கண்டாய்ச் செனித்த
யற்பவமானசகத்தமிதாவொருப்போமெனக் கனித்த ..※
நிர்ப்பரமானவரங்கதேசிகன்றன்றிருவடிசென்னியிற்சேர்ப்பாம்※

## நூல்வரலாறு.

( வேறு. )

கடைந்தவேதாந்தவெண்ணெயைக்கட்டியாய்த்திரட்டிமுன்னோர் ※
கிடம்படவைத்தாரத்தைச் சேரவேயுருக்கிநன்று.................※
யிடம்படநவநீதத்தின் சாரமாய்வகுத்தேனித்தை.... .... .... ...※
யடைந்தவர்மடமைநீங்கி யல்லைற்றினிதுவாழ்வார்..............(௧)

அவையடக்கம்.

நாறுவொன்றுந்தாறுசா நாறுவாணவொருபொருளைத்.... ......※
தாறுமூனக்கண்ணைநறுலத் தன்மையுணர்ந்தோர்க்கிடையகலல்.※
மாறுகந்தான்மணிப்பட்டுத்தால் வையகத்துமப்பமற்றதன்முன்...※
பூதாகந்தான்மட்டமெல்லாம்புன்மையநிலைநிகர்க்குமால் ... (௨)

பாயிரமுற்றிற்று,





## முதலாவது

# வயிராக்கியப்பிரகரணம்.



## நூல்.

### (அவதாரிகை.)

இந்நூலாசிரியர் தாமடைந்த நிச்சயானந்த சாட்சாத்கார அநுபூதிப் பிரத்தியட்சத்தை முமுட்சுக்கள் எளிதினுணர்ந்து நித்திய திருப்தியாகும்பொருட்டுக் கிருபைகூர்ந்து வயிராக்கியப்பிரகரணம் - முமுட்சுப்பிரகரணம் - உற்பத்திப்பிரகரணம் - திதிப்பிரகரணம் - உபசாந்திப் பிரகரணம் - நிருவாணப் பிரகரணம் என்னும் அறுவகைப்பிரகரணங்களால் இந்நூலினிது முடிக்கத் தொடங்கி பூர்வஜென்ம சமஸ்காரபலத்தினால் கிஞ்சித்து ஆவரணவிலட்சணப்பட்டு ஆத்மாநாத்மவிவேகம்படைத்தவனாகிய சீடனுக்குப் பிரபஞ்சவயிராக்கியமுண்டாகும்படி முதலில் வயிராக்கியப்பிரகரணங்கூறுகின்றார்.

### (கவி.)

தேகமேயான்மாப்போகஞ்சேர்ந்திடன்முத்தியாமென் .. *
றேகமின்முகராய்நின் றிறந்தவர்பிறவாவென்ற ..... ........ *
மோகங்களனைத்துநீக்கி முத்தியையடைவதற்கே .... .: *
தாகமாயிருக்குமுத்தர் தானுமேதேவராவார், .......... (௧)

தேவர்மானிடராளுஞ்செனித்திடல்வளர்தன்மாய்தன் ... *
மூவகையிடத்துந் துன்பமாதலான்மோகமென்னுந் ..... *
இவனுட்பற்றைநீக்கச்சிந்தித்தெத்திறத்தானுந் ... ... . *
தாவுமால்துடைத்தல்வேண்டுஞ்சற்குருசகாயத்தன்றே (௨)

### இதன்பொருள்.

வினா. தேகமேயான்மாவல்லாமல் உள்ளேயாகிலும் வெளியேயாகிலும் ஆன்மாவேறில்லையென்னில்.

விடை. காரணங்களிருக்கிறபடியால் அப்படிசொல்லக்கூடாது.

வினா. மனம் ஒன்றேதவிர வேறுகாரணங்களுமில்லை- போகங்களில் ஸ்திரீசையோகமேமுத்தி- அவர்களைச்சதாகாலமும்

நினைத்திருப்பதே கல்வி - சதாகாலமும் அவர்கள் விசார
த்திலுற் சரீரமிளைப்பித்த தவம் - சார்வதா அவர்களுட
ன் சகவாசமாய் வசனித்திருப்பதே சிவன்முத்தி - அப்
போதும் அவர்களது ஸ்தலங்களிற்கூடிச் சையோகவி
ன்பத்திலமிழ்ந்தியிருப்பதே விதேகமுத்தி - அவர்களணித்
துள்ள புஷ்பசந்தனாதிகளின் மணங்களை ஆக்கிராணித்தி
ருப்பதே சுவர்க்கபோகம் - அவர்களதரபானமே தேவா
மிர்தம் - இப்படிப்பட்ட மதத்தைவிட்டுப் பிரிந்தவனே
நரகத்தையடைவன் - இறந்தவர்களொருகாலத்தும் பிற
ப்பதேயில்லை - அப்படிபிறப்பதுண்டானால் முன்னுள்ள
வறிவு இப்போதிருக்கவேண்டும் - அப்படிகாணமையால்
தேகமேயான்மா - போகமே மோக்ஷம் - இறந்தவர்கள்
திரும்பவும் பிறவார்களென்பதற்கு நியாயமென்னில்.

விடை. இப்படியுளறிக்கொண்டு மிருகபட்சிகளைப்போல வறிவி
ல்லாதவர்களாய் அருந்தல் பொருந்தலமாத்திரமாய் வீ
ண்காலம்போக்குவார்களாகில் அவர்களுக்கு நரகமேயன்
றிமோட்சமில்லை - மேலும் நாமிறந்தால் நமக்கிருப்பிட
மெங்கே - நாமெங்கேயிருந்து வந்தோம் நமக்குக் கதி
யேதென்றுவிசாரித்தறியவொட்டாமல் அவர்கள் புத்தியை
மலமறைத்திருப்பது அஞ்ஞானகாரியமல்லாமல் வேறல்ல.

வினா. அஃதெப்படியென்னில்.

விடை. தேகமே அறிவாகிய வான்மாவென்றால், தேகமிருக்கும்
காலமெல்லாம் அறிவிருக்கவேண்டுமே அப்படிகாணாத
படியினால் தேகம் பிணமாய்க் கிடக்கும்போது அறிவா
கியவுயிர்போய்விடுதலால் தேகத்தினுள் அறிவாகியதேகி
யொருவனுண்டு - அவன் இந்தேகத்தைவிட்டுமறுதேகத்
திற்போனதால் இத்தேகம் பிணமாய்க்கிடக்கின்றது - ஆ
கையினால் வேறேதேகியொருவனுண்டென்றும் தேகம்
ஆன்மாவல்ல ஜடமென்றுந் தள்ளப்பட்டது.

வினா. ஸ்திரீபோகமே மோட்சமல்லவென்பதெப்படியெனின்.

விடை. மலங்களைப் புசிக்கவேண்டுமென்றிச்சித்துத்திரிகின்றஊ
ர்ப்பன்றியானது அன்னியரால்விடப்பட்ட அசுத்தமான
மலங்களைப்புசித்துக் கோடையானவெய்யிலால் தவித்து
ச் சூடுகொண்டு வரும்வழியில் அசுத்தமாகியசாக்கடைச்

றுகிறான் இவனுக்கேன் முன்னுள்ள நினைவுகள் தோற்றவில்லை - ஆதலா லிறந்தவர்கள் பிறந்தாலு முன்னிருந்த நினைவுகள் தோற்றுமென்பதே துணிவு.

வினா. அப்படி தோற்றாமைக்குக் காரணமேதென்னில்,

விடை. இந்தச் சீவன் தூலதேகத்துடன் கூடி இந்திரிய விவகாரமான சாக்கிரத்திருந்து பிறகு ஸ்தூலதேகத்தைக் கைவிட்டுச் சூட்சுமதேகத்தை யபிமானித்ததினால் முன்னுள்ள நினைவுகள் தோற்றவில்லை இப்படியே எழுவகைப்பிறப்பினுமுண்டான நினைவுகளு மறந்தந்தத் தூலத்தைவிட்டு மறுபிறப்பாகிய வேறொருதேகத்திற்புகும்போது இந்தச்சீவன் மாறுவஸ்தையிற் பட்டதன்பதினா லறியவில்லை ஆகலால் இறந்தவர் பிறவாரென்ற வினா தள்ளப்பட்டு இறந்தவர் பிறப்பாரென்ற சித்தாந்தமே கொள்ளப்பட்டது.

வினா. ஆனால் சிலர் தேவபோகத்தைக்குறித்து யாகாதிகருமங்களைச் செய்கின்றார்களே அதனால் பயனில்லையோவென்னில்,

விடை. அந்தத்தேவப்பிறப்பினு மின்பமில்லை - எப்படியென்றால் தேவயோனிகளிற் பிறக்கின்றகாலத்திலுந் துக்கம் இதிகாலத்திலும் பிரமாதிதேவர்களாலும் ரிஷீஸ்வரர்களாலும் ஒருவர்க்கொருவரால் நேரிடும் அன்னியோன்னியசாபத்தினாலும் ஒருவர்பெண்சாதி தனங்களை யொருவரபகரிப்பதினாலும் ராக்ஷதர்கள் தங்கள் போகபூமியைப் பிடுங்கிக்கொண்டு அடித்துத் துரத்திவிடுவார்களென்கிறபயத்தினாலுந் துன்பமேயல்லாமல் வெள்ளளவுமின்பமில்லை-மரணகாலத்திலும் முன்செய்துள்ள யாகாதிகர்மபலத்தினால் எழுபத்தொரு சதுர்யுகம் ஆனந்தபோக மனுபவித்துத் திரிந்தவுடன் அங்குள்ளதேவதைகளால் பிடித்துத்தள்ளப்பட்டு நட்சத்திரங்களாகித் தலைகீழாய்ப் பூமியிலெரிந்துவிழும்போது அவ்வானந்த மறந் தனித்தியமாய்ப் போவதினால் மீண்டுப்பசிக்குங் காலத்திலும் முன்பு பசுபந்தனம்பண்ணின பாவகர்மத்தினால் பூமியில் நாக்குப்பூச்சி கிருமிகளாய்ச் செனிப்பதினாலுந் துன்பமென்பதே துணிவு.

வினா. ஆனலிந்தமானிடப்பிறப்பிலாவதின்பமில்லையோவெனில்,

விடை. இந்தமானிடயோனிகளிற் பிறக்கின்றகாலத்திலும் மாதாவின் கருப்பப்பையிற் கட்டுண்டு அவளது மலமூத்திரக் கிருமிகளினாலும் மூலாக்கினியினாலும் வெதும்பி அவளன்னபானாதிகளை நிறையவுண்டபோது உடல் நெருக்கத்தினால் மூச்சவிடு

நிற்கிடமின்றிய வருத்தத்தினாலும் அவனன்னைபோது எழுகின்ற உதராக்கினியினால் சுடப்படுகிறபிரயாசையினாலும் பிறவிநேரக்குங்கால் பிரசூதவாயுவினால் மொத்துண்டு ஆலையிற்பட்ட கரும்புபோலும் செக்கிலிட்ட வெள்ளுபோலும் யோனித்துவாரத்தினெருக்குண்டு மலமேனியினரூனைத் தலைகீழாய்த் தள்ளுவதுபோல் பூமியிற் பிள்ளையாய் விழுகின்றதினாலுந் துன்பம் - இதிகாலத்திலும் சைசவப் பருவத்தில் கணங்கள் பறவையாதிகளால்வரும் நோவுகளினாலும், பாலப்பருவத்தில் காதுகுத்தல்சாமுதலிய படலவியாதிகளாற்படும் பிரயாசத்தினாலும், வாசித்தல் முதலியகருமங்களால் உபாத்தியாயர் முதலானவர்களாலுண்டாகும் வருத்தத்தினாலும், குமாரப்பருவத்தில் தனதானியங்களைச் சம்பாதிக்கவேண்டிவருகிறதாகமோகங்களினாலும், அதற்கிடையூறுவருவதினாலும், விடயபோகவிச்சையினாலும், அகங்காரமிருப்பதினாலும், படியாமற்போனதினாலும், படித்தாற் றர்க்கங்கள்பேசவருவதினாலுந் துன்பம் - விருத்தப்பருவத்திலோவென்றால் ஆசையிகுவதினாலும், நரைதிரைமூப்புகளினாலும், பலவியாதிகளுண்டாதலினாலும் மனைவிமுதலியோர்களுக்கு வியாதி வருதலினாலுந் துன்பம் ஒருவனுக்குப்பிராணதாரமாயிருந்தபிள்ளைசாகவும், அந்நேரம்வீடிடிந்துவிழவும், உழுநிறமாடுசாகவும், கடன்காரர்வந்துமறிக்கவும், அடிமையாள்மறிக்கவும் வாராவிருந்துவரவும் வீட்டில் அரைக்காசளவிலில்லாமல் அயல்வீட்டில்கடன்கேட்க, அவர்களைக்கொடுக்கவொட்டாமல் முன்கடன்காரர்மறிக்கவும், இப்படி நானாவிததுன்பங்களினால் காற்றலைசவானசலத்திற் பிரதிபிம்பித்த சந்திரன்போற் கலக்கப்படுகிற வருத்தமுண்டாவதினாலுந் துன்பம் - மரணகாலத்திலும் வாத பித்த சுர க்ஷய குன்ம சூலைமுதலான பலரோகங்கள் மேலிட்டுச் சயத்துவம் பேதித்திருக்கிறபோது நமனைக் கண்டதுபோல் வரும்பயங்களினாலும், நடுக்கங்களினாலும், உளர்த்தசுவாசத்தினாலும் வருந்திச் சிலேத்துமத்தில் தட்டுண்டு வேதனையான பிராணப்பிரயாணகாலத்திற் காண்கிறதுக்கங்களினாலும், அப்படிப் பிராண னீங்கினபோது நெருப்பாற்றிலுங் கும்பிபாகமான நரகத்திலும் சிந்திறயாறையிலும் அசிபத்திரவனத்திலும் வீழ்த்தி யமபடாள் தண்டிக்கப்பட்ட யாதனைகளினாலுந் துன்பம் - இப்படித் தேவர்மானிடரென்னு மிருவகைப் பிறவிகளே துன்பமானால் ஏனைப்பிறவிகளாகிய மிருகபட்சி தாபராதிகளெல்லாம் துக்கசமுத்திரத்தழுந்தி பாவமான நரகங்களிற் படும்பாடுகளையெல்லாமிவ்வளவென்றனவிட்டுச் சொல்லமுடியாது ஆகையினாலிந்தப்பிறவிகளினீங்குமார்க்கத்தையே விசாரித்தறியவேண்டும்.

வினா. விசாரித்தறியுமார்க்கமெப்படியென்னில்.

விடை. யானெனதென்னும் பற்றுக்களொழிந்தால் சீவத்துவங் கெடும் இந்த யானெனதென்னும் பற்றுகளே சீவசொரூபம் இவ்விருவகைப் பற்றுகளில் முந்தி எனதென்னும் பற்றை விடவேண்டும்.

வினா. அஃதேதெனென்னில்.

விடை. பெண்சாதிபிள்ளைகள் கிரகம் பூமி தனதானியாதிகளை யென்னதென் றபிமானிப்பது ஆத்மாவுக்குச் சுபாவமல்ல-அது அறியாமையான மோகாந்தகார மூட புத்தியினால்வந்தது.

வினா. அதற்குவிவரமெப்படியென்னில்.

விடை. பெண்சாதியானவள் ஒரு தாய்தகப்பனுக்கு மகளாயிருப்பதினாலும் நீ ஒருதாய்தகப்பனுக்குமகனாயிருப்பதினாலும் அவளெந்தவூர் நீஎந்தவூர் இப்படி புறம்பாயிருக்க அவளுன்பெண்சாதியென்றுனக்குச் சத்தியபுத்தி வரலாகுமா-உன்னைவிட்டு அவள்பிரிந்துபோய்விடுகிறாள் அவளைவிட்டு நீபிரிந்துபோய்விடுகிறாயாகையா லுனக்கவள்சொந்தமல்ல அவளை என்னதென்பது கூடாது-பின்னும்பிள்ளையை என்னதென்கிறாயே அந்தப்பிள்ளையை நீயாயுண்டாக்கினையா அல்லது உன்பெண்சாதியாலுண்டாக்கப்பட்டதா அல்லது அன்னியர்களாலுண்டானதா இப்படியுங்களொருவராலுமுண்டாக்கப்படாதிருக்க வீணாக மயங்குவது பிராந்தியே மேலும் சொப்பனத்தில் மலடிபிள்ளைபெற்றதுபோலும் இந்திரசாலவித்தையா வல்லவன் வித்தை காட்டுவதுபோலும் பிரமசிருட்டியினால் இருவருக்குநடுவே ஓர்பிள்ளையெனத்தோற்றியதாலதை எப்படி என்பிள்ளையென்று சொல்லுவது தெருவிற்கண்டபிள்ளையை என்பிள்ளையென்றெவன்சொல்லுவான் அதுபோலப் பிரமசிருஷ்டியால் வந்தபிள்ளை பிரமன்பிள்ளையல்லாமலுன்பிள்ளையல்லவாதலால் பிள்ளையை என்னதென்பதுகூடாது - அப்படியேஇந்தவீடுவாசல் பூமிதனதானியாதி சம்பத்துகளெல்லாம் உன்தகப்பனாலார்ச்சிக்கப்பட்டபடியினாலும் அறிவைநோக்கி விசாரிக்குமிடத்து நீயவனுக்குப் பிள்ளையாகாமற்போகிறபடியினாலும் நீ இதுகளையும் என்னதென்பதுகூடாது.

வினா. அப்படிக்கல்ல நானே கஷ்டப்பட்டுத் திரவியங்களைச் சம்பாதித்து அதனால் வீடுவாசல் பூமியாதிகளைச் சேகரித்தேனே யென்னில்

விடை. அப்படியானாலுமந்தத்திரவியங்களுன்னதல்ல,

வினா. அதுஎப்படியென்னில்;

விடை. திரவியங்களெல்லாம் ராஜாக்களுக்குச் சொந்தமானதாம்

இந்தத் திரவியங்களையு மென்ன தென்பதுகூடாது.

வினா. ஆனால் பெண்டுபிள்ளை திரவியமென்கிற க்ஷேத்திரியங் களென்ன தல்லவென்று போனாலும் இந்தத் தேகமான நான் இருக்கிறேனே யென்னில்,

விடை. தேகமுமுன்னதல்ல நீஒருவரிடத்தி லிரவல்வாங்கினது.

வினா. அதெப்படியென்னில்.

விடை. நெடுங்காலமாய்ப் பிறப்பிறப்புகளாகிய துக்கங்களிற்பட்டுத் திரியக்காதி தாவரங்களாய்ப் பிறந்திளைத்து அந்தப்பிரயாசையெல்லாஞ் சிந்தித்து விவேகத்தினாலறிந்து நீயீசுவரனைநோக்கி இந்தச்சென்ம சாபல்லியமாய்க்கடைதேறும்படி எனக்கோர் மானிடசரீரங் கொடுத்தருளுமென்று பிறவிகள்தோறும் வேண்டினபடியால் ஈசுவரன் கிருபைகூர்ந்து நீ இந்தமானிடசரீரத்தைப் பெற்று நம்மைவேண்டி நிஷ்காமியதவஞ்செய்து நமதுதிருவடிசுகத்தைப் பெறுவாயென்றிரவலாகக் கொடுத்தருளினார்.

வினா. அப்படியானால் அந்தக்காரணத்தை ஒருவருமேனறியவில்லையென்னில்,

விடை. கருப்பாசயத்திற் கட்டுண் டிருந்ததினாலும் பிறவிநோக்குங்கால் பிரசூதவாய்வு முரித்துத்தள்ளுதலினாலும் யோனித்துவாரநெருக்கமுதலிய யாதனைகளாலும் முன்னுள்ளநினைவுகளெல்லாம் இந்தச்சீவன் மறந்து விட்டுப் பஞ்சபூத பௌதிகமாகிய இரவலான இச்சரீரத்தையுந் தானென்று சத்தியபுத்தி பண்ணிக்கொண்டபடியால் ஒருவருக்குங் காரணந்தோற்றவில்லை.

வினா. ஆனாலிரவலென்பதற்கு உவமானமெப்படியென்னில்,

விடை. ஒருபுருடன் ஒருதொழில்செய்யக்கருதி அந்தவீட்டுக் காரனிடத்தில் ஒருகத்தியை யிரவலாகவாங்கிவந்து உடனே அந்தக் கத்தியின்மேல்வைத்த பிரியமோதப் பிரமோதங்களினாலிரவலென்பதுமறந்து சொந்தம்போல வைத்துக்கொண்டு அதனால்தானினைத்தகருமத்தைநிறைவேற்றிக்கொள்ளாமலிருந்துவிட்டான் அப்படியிருக்கச் சிலநாளைக்குப்பிறகு கத்திகொடுத்தவன் சடுதியில்வந்து என்கத்தியைக்கொடுவென்றுகேட்க இவன் அவனுடையகத்தியென்பதுந் தானிரவல் வாங்கிவந்ததும் மறந்து வழக்குப்பேசுமளவில் அவன் கோபங்கொண்டு இவனையடித்துவருத்திக் கத்தியைப் பிடுங்கிக்கொண்டு போவானேயல்லாமல் கத்தியைவிட்டுப் போகமாட்டான்-அதுபோல நீயும் ஈஸ்வரனிடத்தில் அனந்தஜென்மங்கடோறும் வருந்திக்கேட்டு இரவலாக வாங்கிவந்த இந்தச்சரீரத்தை இப்போதுபட்ட பிறவிமூர்ச்சையினு

ண்டு சிலநாட்கழித்தபின் தன்வீட்டுக்குத் தன் கிரஹணியோடு வ ந்துசேர்ந்தான் - அந்தப் பிராமணனைப்பார்த்து குடியிருந்த ஏ ழைப்பிராமணன் நீங்களாரென்றுகேட்க, நாங்களுன்னை இந்தவீ ட்டிற் குடிவைத்துவிட்டுக் காசியாத்திரை போனவர்களல்லவா இ ப்போது நாங்கள் ஜீவந்தராய்வந்து சேர்ந்தோமாதலால் எங்கள் வீடுவாசல்முதலிய வெல்லாம் ஒப்பித்துப்போட்டு உன் சம்பளத் தை வாங்கிக்கொண்டு போவென்றுசொல்ல அந்தவசனத்தைக்கே ட்டு கோபங்கொண்டு வீடாவதேது வாசலாவதேது குடிக்கூலிக் கு வைத்துப்போவதாவதேது உனக்கேதாவது பயித்தியம் பிடித் ததோவென்றுகூவி நீ முன்புதானே இந்த வீடுவாசல்களை விற்ப னைசெய்துவிட்டுப் போயினையே அதற்கு விக்கிரயசாதன மிருக் கிறதென்று அபிமானித்து வழக்குப்பேச அதுகேட்ட காசிவாசி யும் நியாயஸ்தலத்திற்போய் கூகூ வென்று முறையிட அம்மு றையீடுதலைக்கேட்ட நியாயாதிபதிகள் வஞ்சகனான ஏழைப் பிரா மணனைப் பிடித்துவரச்சொல்லி விசாரிக்க அவன் அந்தநியாயாதி பதிகளைப்பார்த்து இவர்கள்யாத்திரை போகிறபோது விற்றுவிட் டுப்போனார்களன்றி என்னைக்குடிவைத்துப் போகவில்லையென்று பொய்ச்சாதன மொன்றெடுத்துக்காட்ட அதுகண்ட நியாயாதிப திகள் இதைச்சாட்சிமுகாவெளியா லறியவேண்டு மென்று அந்த வீட்டிலுள்ளவர்களையழைப்பித்து நீங்களிந்தச்சேதி யறிவீர்களா வென்றுகேட்க அவர்கள் நியாயாதிபதிகளைப்பார்த்து இவனைக்கு டிவைத்துப் போனதேயல்லாமல் வீடுவாசல்களை விற்றுப் போ கவில்லையென்று சொன்னார்கள்-அதுகேட்ட நியாயாதிபதிகள் அந் தக்கபடப் பிராமணனைப் பிடித்துக்காவல்பண்ணி நீதிசாஸ்திரமா ய் ஒருவன்சொத்துக்களை யபகரிக்கும்படி பொய்ச்சாதன மேற்ப டுத்தினபடியால் உனக்குமிருந்த அபராதம் விதிக்கப்பட்டது இ ந்தஅபராதம் விதித்த முதற்பொருள்சேருமளவுங் காராகிரகமா கியகாவலிலிருந் தூழியஞ் செய்யவேண்டும் நீஅவன் சொத்துக ளெல்லாமபகரித்துக் கொண்டபடியால் உன் சொத்துக ளெல்லா ம் ஏலம்போடுவித்து வட்டிக்காகச்சேர்க்கப் படுமென்று நியாயத் தீர்த்தார்கள் அதுபோலத்தேகாதிப்பிரபஞ்ச விவகாரத்தில் ஒருவ னுக்கு யானெனதென்னு மபிமான மேலிடுமாகில் முதலாகிய மோட்சபலமுங் கெட்டு வட்டியாகிய நித்திய சுவானுபவ முமு போய் சதாதுக்கத்திலேயே மூழ்கிக்கிடப்பன்.

வினா. ஆனால் அபிமான நீங்கும் வழியேதென்னில்.

விடை. சரீரமுதலாயுள்ள அகப்பற்றையும் ஈஷணாத்திரயங்களான புறப் பற்றையு மன்னியமென்றறிந்து அதுகளில்நானென

னதென்று வருமபிமானங்களைவிட்டு இதுகளை நமக்குக் கூட்டிவைத்தவினையானது நியமப்படிபிரித்துவிடுமென்பதிற்சந்தேகமில்லை இதுவெல்லாங் கனவிற்கண்ட பொருள்போலாகுமென்றுகருதி அவற்றில் ஆசாபியமெழவொட்டாமல் பிரமத்தியானத்திலனுதினமும் பழகுவதே அபிமானம் நீக்கும் வழி.

வினா. அபிமானமற் றனுபவிப்ப தெப்படியென்னில்,

விடை. புளியம்பழத்திற்றோடுபோலுந் தாமரையிலையிற் றண்ணீர் போலும் சேற்றிற்பிள்ளைப்பூச்சிபோலும் யானெனதென்னும்பற்றுகளிற் பற்றியும் பற்றற்றிருந்து சற்குரு சாஸ்திர முன்னிலையில் சிரவணாதிகளையவசியம்பண்ணவேண்டியதுசித்தம்.

வயிராக்கியப்பிரகரணமுற்றிற்று.

---

## இரண்டாவது

# முமுக்ஷுப்பிரகரணம்.

(அவதாரிகை.)

முற்பிரகரணத்தால் பிரபஞ்ச வயிராகந்தோன்றி தேகாதிப்பிரபஞ்சங்களநித்தியமென்றும், தேகியொருவனே நித்தியமென்றும், ஒரு வாற்றாலுணர்ந்த சீடனுக்கு மோட்ச தாகமுண்டாகும்படி மேல்முமுட்சுப்பிரகரணங்கூறுகின்றார்.

(கவி.)

சற்குருசாத்திரத்தாற்சவணமாதிகளுண்டாக.................... ※
நற்றுணைசகாயமான வனுபந்தநான்குமுண்டாய்............ ※
முற்படுசாதனத்தின் மோட்சதாகத்திறலே.................... ※
சிற்பாகுருவைத்தேடித் திகைத்திடுவோன் முன்கண்டான் .....(௧)
கண்டனனாசான்பாதங் கருத்துறவணங்கியெந்தாய்............ ※
பண்டைமாயையிலுண்மூழ்கிம் பஞ்சகோசத்தைநீக்கித்............ ※
தொண்டனேற்றுபதேசந்தான் சொல்லுமென்றவனைவைத்தங் ※
குண்டெனுந்தீக்கைசெய்தங்கொருப்படுஞ்சத்தருஞ்செய்தான் (௨)

இதன்பொருள்.

வினா. சற்குருசாஸ்திர முன்னிலையிற் சிரவணாதிகளுண்டாவதற்கு முன்புசெய்காரியமேதென்னில்.

விடை. அநுபந்தசதுஷ்டயங்களையநுசரிக்கவேண்டும்.

வினா. அநுபந்தசதுஷ்டயமாவதேதெனில்.

விடை. அதிகாரி விஷயம் சம்பந்தம் பிரயோசனமென்றுயிந்த நான்கும் சாஸ்திராரம்பத்திற்குப்பலம் ஆதலாலிந்தநான்கும்வேண்டும்.

வினா. அதெப்படியென்னில்.

விடை. சாஸ்திராரம்பஞ் செய்கிறபுருடனுக்குப் பலலக்ஷணமாயிருப்பதே பிரயோசனம் அப்படிப்பிரயோசனமில்லாவிட்டால் மூடனுக்குங்கூட வொன்றிலும்பிரவிர்த்தி வரமாட்டாது,

வினா இந்தச் சாஸ்திரத்திற் கதிகாரியெவனென்னில்.

விடை. சாதன சதுட்டய சம்பத்தியுடையவனும் யத்திசாமர்த்தியனும் வித்துவானும் மேதாவியுமாயிருக்கிற புருடனே யதிகாரி.

வினா விஷயமாவதேதென்னில்.

விடை. ஜீவப்பிரமாயிக்கமாயிருக்கிற சைதன்னியமே விஷயம்- இன்னம் அந்தசொரூபத்திற் சகலவேதவுபநிஷதார்த்தங்களுக்குமிருக்குமோ அதுவே விஷயமென்றுஞ்சொல்லப்படும்.

வினா. சம்பந்தமாவதேதென்னில்.

விடை. இப்போதுசொன்ன ஜீவப்பிரமாயிக்கமான வஸ்துவுக்கும் அந்த வஸ்துவைப் பிரமாணமாகச்சொல்லுஞ் சாஸ்திரத்திற்கும் போதபோத்திய லக்ஷணமாயிருப்பதே சம்பந்தம்.

வினா. பிரயோசனமாவதேதென்னில்.

விடை. பிரத்தியகான்மாவும் பிரமமும் ஐக்கியானுபவம்பெறுவதே யானந்தம் அவ்வானந்தானுபவத்திலுஞ் சகல சங்சாரபந்தங்களுமொழிந்து நிற்பதே பிரயோசனம் எவனொருவனுக்குச் சாதனசதுட்டயம் பொருந்தியிருக்கின்றதோ அவனுக்கே இந்தப் பிரயோசனமுஞ் சித்திக்கும் - நான்குசாதனத்திலொன்று குறைந்தாலுஞ் சித்திக்காது இந்நான்கு சாதனமுமுடையவனே வேதாந்த விசாரத்திற் கதிகாரியாவன்.

வினா. இந்தச் சாதனசதுட்டயமெப்போது சம்பாதிக்கவேண்டுமென்னில்.

விடை. சிரவணத்திற்கு முன்பே சம்பாதித்துக்கொண்டு பிறகு சிரவணத்திலிறங்கவேண்டும் இல்லாவிட்டால் ஞானமுண்டாகமாட்டாது.

வினா. சாதன சதுட்டயமாவதேதென்னில்.

விடை. நித்தியா நித்தியவஸ்து விவேகம் - இகமுத்திரார்த்தபல போகவிராகம் சமாதிசட்சம்பத்தி முமூட்சுத்துவம் இந்நான்குமாம்.

வினா. இந்நான்கு சாதனங்களில் நித்தியா நித்தியவஸ்துவி

வினா. அநுபவப்பிரமாண மெப்படியென்னில்.

விடை. சாக்கிரத்திருந்த பாகியமான நாமரூபப் பிரபஞ்சங்களின் சொப்பனமான அந்தர் மனோசங்கற்பத்திலில்லை - சொப்பனத்திருந்த அந்தர்மனோசங்கற்பங்கள் சுழுத்தியான அவித்தையிலில்லை - சுழுத்தியிலிருந்த அறியாமையும் ஆனந்தமுஞ் சாக்கிரசொப்பனத்திலில்லையென்று கண்டறிவதேயநுபவப்பிரமாணம்

வினா இனிபிரமம்நித்தியமென்பதிற்சுருதிப்பிரமாணமேதெனில்

விடை. பிரளயத்திற் பஞ்சபூதமும் அதன் காரணமான அஞ்ஞானமும்பிரமத்திலொடுங்கிப் பிரமமாத்திரமிச்சமாய்ச்சேஷித்திருக்குமென்றறிவதே சுருதிப்பிரமாணம்.

வினா. யுத்திப்பிரமாணமேதென்னில்.

விடை. இந்தப் பூதபௌதிகங்களெல்லாம் நாடோறு நசித்து மீண்டும் உற்பத்தியாகிறதற்குக் காரணமான பிரமமொன்றிருக்குமென்றறிவதே யுத்திப்பிரமாணம்.

வினா. அநுபவப்பிரமாணமேதென்னில்.

விடை. நித்தியத்துவமான பிரமமே பூதபௌதிகங்களாகத் தோற்றுதென்று கண்டறிவதே யநுபவப் பிரமாணம் இதுவே முதற்சாதனம்.

வினா. இகமுத்திரார்த்தபலபோகவிராகலட்சணமாவதேதெனில்

விடை. இகத்திலுண்டான தாரபுத்திர தனதானியாதிகளிலும் ராஜபோகத்திலும் பரத்திலுண்டான யக்ஷஸ்திரீகளிடத்திலும் அயிராதிசொர்க்கபோகத்திலிடத்தும் மலமூத்திர வாந்தியனங்களிலெப்படி ஒருவருக்குமாசையிராதோ அப்படியே இவ்வாசையிறந்திருக்கவேண்டுமென்று சுருதியுத்தி யநுபவப்பிரமாணங்களாற்கண்டறிவது.

வினா. இகலோகபோகங்கள் அசுத்தமென்பதற்குச் சுருதிப்பிரமாணமேதென்னில்.

விடை. தாரபுத்திராதிகளுடைய சரீரங்களெல்லாம் எச்சில் இரத்தமாங்கிஷமலமூத்திரங்கள்கூடி ஒருவடிவமாக நிருமிக்கப்பட்டிருக்கிறதென்று கண்டறிவதே சுருதிப்பிரமாணம்.

வினா, யுத்திப்பிரமாணமேதென்னில்,

விடை, அத்திக்கனி பார்க்கிறகண்களுக்குச்சுத்தமாகவும் அதைப்பிட்டுப்பார்த்தால் அசுத்தமாய்க்கிருமிகணிறைந்து அசுசிதமாகவுமிருப்பதுபோல தாரபுத்திராதிகளும் பார்க்கிறகண்களுக்குச் சுத்தமான ரூபலாவண்ணியமாகவும் உள்ளேமலமூத்திராதி துர்க்கந்தங்கணிறைந்திருக்கிறதென்றுவிசாரிக்குமளவில் அசுத்தமாகவுமிருப்பதினால் இவர்களைத் தொட்டாலுடனே சுத்தசெ

டீருக்கொள்ளவேண்டுமென்று கண்டறிவதே யுத்திப்பிரமாணம்.

வினா. அனுபவப்பிரமாணமேதென்னில்,

விடை, அவர்களுக்கு வியாதிபீடைகளேரிட்டவிடத்தும் எச்சில் நீட்டு மலம் சீழ் இரத்தமாங்கிஷங்கள் காணப்பட்டவிடத்தும் அவர்களைத்தொட அசங்கிதமாயிருப்பதினாலும் அவர்களிறந்துபோனவிடத்தும் அரைநாழிகையளவது வீட்டில்வைக்காமல் சூதகமென் றுடனே யெடுத்துக்கொண்டுபோய் மயானத்திற்போட்டு வருதலினாலும் அசுத்தமென்று கண்டறிவது அனுபவப்பிரமாணம்.

வினா, திரவிய மசுத்தமென்பதற்குச் சுருதிப்பிரமாண மேதென்னில்,

விடை, திரவியந்தேடுங்காலத்தில் சுத்தமின்றி அசுத்தமான தொழில்களிலு மூயாதுட்டபடி மன முண்டாகுமென்பதைக் கண்டறிவதே சுருதிப்பிரமாணம்.

வினா. யுத்திப்பிரமாணமாவதேதெனில்,

விடை, திரவியங்கிடைத்தகாலத்தும் மனைவிமக்கள் கிரகபூமிகளைத் தேடுகின்ற பாசபந்தத்திற் கட்டுண்டழுந்தி நிற்குமென்பதைக் கண்டறிவதே யுத்திப்பிரமாணம்.

வினா. அனுபவப்பிரமாணமாவதேதென்னில்,

விடை, திரவியமதிகரித்தவிடத்து ஆசை குரோத லோப மதங்களால் மூடப்பட்டு முன்பின்தோற்றாது அந்த அந்தகாரகூபத்தில்விழுந்து பலவிகாரங்களை யடையுமென்று கண்டறிவதே யநுபவப்பிரமாணம்.

வினா, பரலோகபோகங்கள் அசுத்தமென்பதற்குச் சுருதிப்பிரமாணமேதென்னில்,

விடை, மாமிசசரீரத்திற்பொருந்துந் தாபத்திரயங்களுந் தேவசரீரங்களுக்கு முண்டென்றறிகிறதே சுருதிப்பிரமாணம்,

விடை, தேவபோகத்திலும் மநுஷபோகத்தைப்போலவே துக்கமென்பதைக் கண்டறிவதே யுக்திப்பிரமாணம்,

வினா. அனுபவப்பிரமாணமேதென்னில்.

விடை, தேவர்களும் புண்ணியமுடிந்தவிடத்தில் அதோமுகப்பட்டு தலைகீழாய்ப் பூமியில் விழுகிறபடியால் அசுத்தமென்றுகண்டறிவதே யநுபவப்பிரமாணம் இதுவே யிரண்டாஞ்சாதனம்.

வினா. சமாதிஷட்கசம்பத்தி லட்சணமாவதேதென்னில்,

விடை, சமம் தமம் உபரதி திதிட்சை சமாதானம் சிரத்தையென்றறுவகைகளாம்,

விஞா, சமமாவதேதெனில்,
விடை, இறந்தகாலத்திற்கழிந்தபொருளையும் வருகாலத்தில் வரும்பொருளையுங்குறித்துச் சிந்திப்பதுமனம் - அம்மனத்தைநோக்கி அவற்றைச்சிந்திக்கவொட்டாதிருத்தினால் நிகழ்காலத்திலுள்ளபொருள்களில் மமதைகொள்ளும் - இப்படிமமகரித்தபொருளுக்கொருவிக்கினநேரிட்டால் உடனே துக்கம்வரும் ஆதலால் அதுகளிலொன்றையுநினைக்கவொட்டாமல் மனோநிக்கிரகம்பண்ணுவதே சமம்,
விஞா. தமமாவதேதென்னில்-
விடை. ஞானேந்திரியகன்மேந்திரியங்களை விஷயங்களிற்செல்லவொட்டாமற்றடுப்பதே தமம்.
விஞா. உபரதியாவதேதென்னில்,
விடை, செய்யப்பட்ட சகலகன்மங்களிலும் பலனைநாடிச்செய்தாக்கின் பிறந்து அக்கன்மபலன்களையனுபவிக்கவேண்டிவருமாதலால் அதுகளையென்றுதள்ளிவிட்டு தான் செய்யுஞ்சகலகன்மங்களிலும் பலனைநாடாது ஈசுரார்ப்பணமாகச் செய்வதேயுபரதி.
விஞா. திதிட்சையாவதேதென்னில்.
விடை. சுகதுக்கங்கள்வந்தபோது அதுகள் தேகேந்திரியாதியந்தக்கரணங்களுக்குச் சுபாவமென்று சமனாக்கக்கண்டு தன்னைவொருவர்வாதித்தவிடத்தில் அவர்களைத் தண்டிக்கு மகிமாவல்லபந் தமக்குண்டாயிருந்தும்பொறுத்திருக்கின்றதே திதிட்சை.
விஞா. சமாதானமாவதேதென்னில்.
விடை. பெரியோர்களிடத்திலிருந்து சிரவணம்பண்ணுங்காலத்தில் இந்திரியாதி யந்தக்கரணங்களை அந்நியமாகிய விஷயங்களிற்போய் விழவொட்டாமற்றடுத்துச் சிரவணத்தினிறுத்துவதே சமாதானம் - இந்தச்சமாதானமில்லாவிட்டா லுபய பிரஷ்டனாவன்,
விஞா, சிரத்தையாவதேதென்னில்,
விடை, குருவினிடத்திலும் வேதாந்தசாஸ்திரத்தினிடத்திலும் ஈசுவரனிடத்திலும் நியமமாய் பயபக்திவிசுவாசமுற்றுச் சித்தசுத்தியுண்டாகியிருப்பதே சிரத்தை-இதுவே மூன்றாஞ்சாதனம்.
விஞா, மூமுட்சுத்துவலக்ஷணமாவதேதென்னில்,
விடை. இந்தஜனனமரணரூபமான சம்சாரப்பிரவாகத்திலகப்பட்டு ஆத்தியாத்மிக ஆதிபௌதிக ஆதிதெய்விகமென்னுந்தாபத்திரயங்களால் வருந்தி இந்தச்சம்சாரதுக்கத்திலொருநிமிஷமாகிலுமிருக்கப்படாதென்று மனோபயத்தோடு இந்தப்பிரமை

வினா, சமமாவதேதென்னில்,

விடை, இறந்தகாலத்திற்கழிந்தபொருளையும் வருகாலத்தில் வரும்பொருளையுங்குறித்துச் சிந்திப்பதுமனம் - அம்மனத்தைத்தேக்கி அவற்றைச்சிந்திக்கவொட்டாது நிறுத்தினால் நிகழ்காலத்திலுள்ளபொருள்களில் மமதைகொள்ளும் - இப்படிமமகரித்தபொருளுக்கொருவிக்கினநேரிட்டால் உடனே துக்கம்வரும் ஆதலால் அதுகளிலொன்றையுநினைக்கவொட்டாமல் மனோநிக்கிரகம்பண்ணுவதே சமம்,

வினா. தமமாவதேதென்னில்-

விடை. ஞானேந்திரியகன்மேந்திரியங்களை விஷயங்களிற்செல்லவொட்டாமற் றடுப்பதே தமம்.

வினா. உபரதியாவதேதென்னில்,

விடை. செய்யப்பட்ட சகலகன்மங்களினும் பலனை நாடிச்செய்தாக்கிற்பிறந்து அக்கன்மபலன்களையனுபவிக்கவேண்டிவருமாதலால் அதுசுமையென்றுதள்ளிவிட்டு தான் செய்யுஞ்சகலகன்மங்களினும் பலனைநாடாது ஈசுரார்ப்பணமாகச் செய்வதேயுபரதி.

வினா. திதிட்சையாவதேதென்னில்.

விடை. சுகதுக்கங்கள்வந்தபோது அதுகள் தேகேந்திரியாதியந்தக்கரணங்களுக்குச் சுபாவமென்று சமனாக்கண்டு தன்னையொருவர்பாதித்தவிடத்தில் அவர்களைத் தண்டிக்கு மதிகாரவல்லபற் றனக்குண்டாயிருந்தும்பொறுத்திருக்கின்றதே திதிட்சை.

வினா. சமாதானமாவதேதென்னில்

விடை. பெரியோர்களிடத்திலிருந்து சிரவணம்பண்ணுங்காலத்தில் இந்திரியாதியந்தக்கரணங்களை அந்நியாகிய விஷயங்களிற்போய் விழவொட்டாமற் றடுத்துச் சிரவணத்தினிறுத்துவதே சமாதானம் - இந்தச்சமாதானமில்லாவிட்டால் உபயபிரஷ்டனாவன்,

வினா, சிரத்தையாவதேதென்னில்,

விடை, குருவினிடத்தும் வேதாந்தசாஸ்திரத்தினிடத்தும் ஈஸ்வரனிடத்தும் நிர்மலமாய் பயபக்திவிசுவாசமுற்றுச் சித்தசுத்தியுண்டாயிருப்பதே சிரத்தை- இதுவே மூன்றாஞ்சாதனம்.

வினா, முமுட்சுத்துவமாவதேதென்னில்,

விடை. இந்தஜெனனமரணரூபமான சம்சாரப்பிரவாகத்திலகப்பட்டு ஆத்தியாத்மீக ஆதிபௌதிக ஆதிதெய்விகமென்னுந் தாபத்திரயங்களால் வருந்தி இந்தச்சம்சாரதுக்கத்திலொருதிவசமாகிலு மிருக்கப்படாதென்று மனோபயங்கொண்டு இந்தப்பிரமா

யப்படாதேயென் றபயாஸ்தங்கொடுத்து அவனை ஒருபோதும் அகங்காரமதயானைவந்தடராமலும் மாயாமோகம்பற்றாமலும் சித்தமென்னுநாய்ப்பரிசம்படாமலும் நிசானந்தானுபூதி யுண்டாகும்படி வேதாந்தவிசாரமென்னுஞ் சிம்மாசனத்தில் தாமெழுந்தருளியிருந்து மூற்சொல்லிய அகங்காராதிமிருகங்கள் அந்தத்தொனியினாலடங்கும்படிசெய்து பிறகு நிச்சயாத்மகமான சூட்சுமபுத்தியுள்ளசீடன் மஸ்தகத்தில் அஸ்தத்தைவைத்துப் பிரமோபதேசமான ஞானதீக்ஷைசெய்தருளுவார்.

வினா. தீக்ஷையென்பதற்கருத்தமேதென்னில்.

விடை. தீயென்றும் க்ஷையென்றமிருவகை - அவற்றுள் தீயென்பது அஞ்ஞானமானமனமகங்காரசித்தநிற்கப்புத்தியே அவயவத்தேகாவுதான நிச்சயம்பண்ணுவது அஃதெட்டபடியென்றால், பாம்பானது ருபத்தேஜசானகண்களால் மந்திரங்களாகிய சத்தத்தைக்கிரகிக்கப்போகாதென்றறியாமல் அந்தமந்திரசத்தத்தைகிரகித்து அதன்வசத்திற் கட்டுப்பட்டதுபோல புத்தியும தான் ஞானதேஜசென்றறியாமல் அவயவத்தேகாவுதான நிச்சயபுத்திபண்ணுமென்றாவிப்பது க்ஷையென்பது சகலகன்மங்களுநசிப்பித்து ஆகாசம்போல நின்மலமாக்குவது - இந்தப்படி நிலத்ததே பிரமோபதேசமான ஞானதீக்ஷையென்றறியவேண்டியது சித்தம்.

வேர்த்தன் முதலியவெண்குணங்களென்றதற்குப்பிரமாணம்
ஒழிவிலொடுக்கம்.

வேர்க்குங்கண்ணீர்ததும்புங்கம்பிக்குமெய்நடுங்கும் ...... *
வார்த்தைதழுவு மனம்பதறுங்-கார்க்குமயாய்க ...... *
காந்துமூர்ச்சாமாஞ்சலியாகுங்காதலித்தார்க் ...... *
கேய்ந்தகுணங்காணிவையெட்டும் ...... *

ஏகாங்கதுவிதாங்கமெஷ்டாங்கமென்பதற்குப் பிரமாணம்.
சிவபுண்ணியத்தெளிவு.

சிரமேகாங்கம்வலக்கரத்தைச்சிரத்திற்குவித்தல் துவிதாங்கம் ... *
சிரமேல்வாமகரத்தினையுஞ்சேர்த்தல்திரியாங்கமதாகும் ... *
சிரநீக்காருஞ்சானுக்களிலந் திண்டிற்பஞ்சாங்கமதாகும் ... *
சிரமோவாய்கால்கைகாதுசெகத்திற்படிதலட்டாங்கம் ... *

இரண்டாவது முமூட்சுப்பிரகரணமுற்றிற்று.



மூன்றாவது

# உற்பத்திப் பிரகரணம்.



## அவதாரிகை.

முந்பிரகரணங்களிரண்டினும் மோட்சதாகம்பிறந்து சற்குருலாப முண்டாகிச் சிரவணாதிகம்பெற்றவனுக்கு மேல் அபரோட்சாநு மானுபவசமாதிஞானமுண்டாகும் பொருட்டு உற்பத்திப் பிரகர ணங்கூறுகின்றார்.

(கலி)

சுத்தமாப்பிரமத்தன்னிற்றோற்றுமாயையின் குணத்தாற் ※
பற்றுருவீசன்சீவன் பஞ்சபூதங்களுண்டாய் ※
மற்றுமாம்பூதந்தானே மருவிச்சூக்குமங்களாகி ※
நித்தனுந்தாலபஞ்சீகரணமாய்த்திகழுங்காணே (௧)

இதன் பொருள்.

வினா: அகண்டபரிபூரணசொரூப வியாபகத்தில் ஜெகஜீவபரந் தோற்றியதெப்படியென்னில்.

விடை. சுத்தப்பிரமமாகிய சர்வசாட்சியினிடத்து அக்கினியிற் சூடுபோலபின்னமாக வொருசித்சத்தியுண்டு அச்சத்தி அதீதப்பிரமத்திலடங்கியிருக்கும்போது அவ்வகண்டசொரூப வியாபகத்திற்குச் சுத்தப்பிரமமென்று பெயர் அப்படி அபின்னமான சித்சத்தி பின்னமாய்விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தை வியாபிக்கும்போது பராசத்தியென்றுபெயராயிற்று அப்பராசத்தியாகிய மகாகாரணசரீரத்துடன்கூடி அகண்டாதீதஸ்தானமாகிய துரியாவஸ்தைக்கபிமானியாயிருந்து சுப்பிரகாசமாய் விளங்குகையால் அவ்வியாபகத்திலுள்ள சுத்தப்பிரமத்திற்குப் பரப்பிரமமென்னுங் குருவென்றுஞ் சிவமென்றும்பெயர்வந்தது இது சாமவேத மகாவாக்கியமான தத்வமசி வாக்கியத்திற்சொல்லும் இது அசிபதார்த்தமான சிவதுரியம் - இப்படி அவயவரகிதமாயிருக்கின்ற பராசத்தியினிடத்தில் பிரமசந்நிதானவிசேஷத்தால் சத்துவ ரஜ தமமென்னும் அவிர்க்கிருத குணங்களுண்டாயின.

வினா. அக்குணங்களுக்கு நாமமேதென்னில்.

விடை. சத்துவத்திற்கு ஆனந்தரூபசத்தியென்றும் ரஜசுக்குச்சித்ரூபசத்தியென்றும் தமசுக்குச்சத்ரூபசத்தியென்றும் பெயராயின.

வினா. அந்தப்பரப்பிரமம் சத்துவத்திற்பிரதிபலித்தபோது நாமமேதென்னில்.

ப்பிரதிபலனத்திற்குச் சீவனென்றுபெயர் - அவ்வவித்தையாகிய மகாகாரணசரீரத்துடன்கூடிலலாடஸ்தானமாகியதுரியாவஸ்தைக்கபிமானியாயிருந்து அவஸ்தாத்திரயவிலட்சண ஞானசொரூபியாயிருக்கிறபடியால் அப்பிரமசைதன்னியத்திற்குச் சீவசாட்சியாகிய கூடஸ்தனென்றும் பிரத்தியேகாத்மாவென்றும்பெயராயின. இதற்கு ஞானசத்தி ஆனந்தபரவசயோகம் ஓங்கார அட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையுமடங்கிநிற்கையால் அவ்வாத்மாவுக்கு நிம்மலாத்மாவென்று மொருபெயர்வந்தது இதுவே தொம்பதார்த்தமான சீவதுரியம்.

வினா. ஆனால் மூவகையான்மாக்க ளுண்டானதெப்படியெனில்.

விடை. இராசதகுண அவித்தையில் சத்வ ரஜசு தமசென்று மூக்குணங்களுண்டாயின - அவற்றுள் தாமதகுணப்பிரதானமாக ஆனந்தமயகோசமாகிய காரணசரீரத்துடன்கூடி இருதயஸ்தானமான சுழுத்தியவஸ்தைக் கபிமானியாயிருந்து சுழுத்தி சுகத்தை யனுபவித்திருத்தலால் அவ்வபிமானிக்குப் பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திகனென்றும் அபரிச்சின்னனென்றும் பெயராயின - இதற்குத்திரோதாயிசத்தி ஆனந்தயோகம் மகார அட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையுமடங்கியிருக்கிறபடியால் இதையதிஷ்டித்திருந்த ஆத்மாவுக்குப் பரமாத்மாவென்றுமொருபெயர்வந்தது இதுவே தொம்பதார்த்தமான சீவசுழுத்தி.

சத்துவகுணப்பிரதானமாகப்பிராணாதிகோசத்திரயங்களாகிய சூட்சுமசரீரத்துடன்கூடிக் கண்டஸ்தானமான சொப்பனாவஸ்தைக் கபிமானியாயிருந்து சொப்பனப்பிரபஞ்சங்களிற்கூடியுங்கூடாதிருத்தலால் அவ்வபிமானிக்குத் தைசதனென்றும் பிரதிபாதிகனென்றும் சொப்பனகற்பிதனென்றும் பெயராயின - இதற்கு இச்சாசத்தி அயுத்தயோகம் ஏனென்றால் பேதாபேதமின்றி யனுபவிப்பன் - உகார அட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையுமடங்கியிருக்கிறபடியால் இதை யதிஷ்டித்திருந்த ஆத்மாவுக்கு அந்தராத்மாவென்று மொருபெயர்வந்தது இதுவே தொம்பதார்த்தமான சீவசொப்பனம்.

இராசதகுணப்பிர்தானமாக அன்னமயகோசமாகிய ஸ்தூலசரீரத்துடன்கூடி நேத்திரஸ்தானமான ஜாக்கிராவஸ்தைக் கபிமானியாயிருந்து பிரபஞ்ச விவகாரங்களில் முயன்றுநிற்பதால் அவ்வபிமானிக்கு விஸ்வனென்றும் வியவகாரிகனென்றும் கிஞ்சிஞ்ஞனென்றும் சிதாபாசனென்றும் பெயராயின - இதற்குக் கிரியாசத்தி லோகாபிமானத்தினால்நல்லதுபொல்லாதென்றறிந்தனுபவிப்ப சுயத்தியுக்தயோகம் அகாரவட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையும

டங்கியிருக்கிறபடியால் இதையதிஷ்டித்திருந்த ஆத்மாவுக்கு ஜீவாத்மாவென்று மொருபெயர்வந்தது - இதுவே தொம்பதார்த்தமான ஜீவசாக்ஷியாம்.

தொம்பதமுற்றிற்று.

வினா. தாமதகுணப் பிரகிருதியின்காரியமெப்படியென்னில்.

விடை. பிரகிருதியினிடத்து ஆவரணவிக்ஷேபமென்றிரண்டு சக்திகளுண்டு அதில் ஆவரணமானது தத்துவஞானிகளையுமீஸ்வரனையுந்தவிர மற்றைச் ஜீவர்களுக்கெல்லாம் சரீரத்திரயம் ஜீவசாக்ஷிசைதன்னியம் இதுகளின்பேதந் தெரியவொட்டாமல் மறைத்து நிற்கும் இவ்வாவரண நீங்குவதே முத்தி தமோகுணப் பிரதானமான விக்ஷேபசத்தியே மகாகாரணப் பிரபஞ்சமாய் நின்றது விக்ஷேபசத்தியும் சத்வ ரஜஸ தமமென்று முக்குணசமமாகிநிற்கும் அவற்றுள் தமஸ பிரதானமாகும்போது காரணப்பிரபஞ்சமும் சத்வப்பிரதானமாகும்போது சூக்ஷ்மப்பிரபஞ்சமும் ரஜஸப்பிரதானமாகும்போது ஸ்தூலப்பிரபஞ்சங்களுமுண்டாயின.

வினா. அதற்குவிவரமெப்படியென்னில்.

விடை. சத்துவகுணமாயையிற் பிரதிபிம்பித்த ஈஸ்வரன் நிருமலசலத்திற் பிரதிபிம்பித்த சூரியன்போல் ஏகராகியும்சர்வஞ்ஞராகியுமிருப்பார் இராசதகுணவவித்தையிற் பிரதிபிம்பித்த ஜீவர்கள் அவித்தையுமனேகமாகையால் மலினசலத்திற் பிரதிபிம்பித்த அனேகஞ் சூரியர்போல் அனேகராகியும் கிஞ்சிக்ஞராகியுமிருப்பார்கள் அஞ்ஞானமவித்தையாற் பிரதிபிம்பரான ஜீவர்களுக்குச் சர்வக்ஞியரான ஈஸ்வரன் கிருபைகூர்ந்து சரீரத்திரயங்களைக் கொடுத்து முத்தியடைவிக்கும்படிக்கு தமோகுணமான பிரகிருதியை இரண்டுபங்காக்கி முதற்பங்கில் ஆவரணசத்தியையும் இரண்டாம்பங்கில் விக்ஷேபசத்தியையுமுண்டாக்கினார் அப்பிரகிருதியினதிவேமகாகாரணசரீரம் அதிற்பிரதிபிம்பித்தஜீவனே பிராஞ்ஞன் அதினறியாமையே ஆனந்தமயகோசமான காரணசரீரம் இப்படிப்பட்ட வாவரணசத்தியானது ஜீவதுரியத்திருந்த கூடஸ்தனையும் ஈஸ்வரனையுந்தவிர மற்றைச்ஜீவர்களுக்கெல்லாம் ஸ்தூலசூக்ஷ்மகாரண சரீரபேதங்களையு மவற்றின் அபிமானிகளையுஞ் சாக்ஷிசைதன்னியங்களையு மொன்றுக்கொன்றுபேதந்தெரியவொட்டாமல் மறைக்கும் ஆகையால்மறைபட்டஜீவர்களிந்த விருபத்தொன்பது தத்துவங்களையும் தாமென்றபிமானிப்பார்கள் அவ்வபிமானத்தை அகங்காரக்கிரந்தியென்றுஞ் சங்சாரபந்தமென்றுஞ் சொல்லுவார்கள்.

வினா. ஆனால்முத்திகூடுவதெப்படியென்னில்.

விடை. சற்குருகடாட்சத்தினா லாவரணநீங்கி இருபத்தொன்பது தத்துவங்களினா மொன்றாக்கொண்டுள்ள பேதங்களைக் கண்டறிவதேமுத்திகூடுமுபாயம்.

வினா. ஆனால் விட்சேபசத்தியின் காரியமேதென்னில்.

விடை. விக்ஷேபசத்தியும் சத்வ ரஜஸ தமமென்னும் திரிகுணசகிதமாயிருக்கும் அந்தச்சத்தியில் சத்ததன்மாத்திரையானவாகாசமும் ஆகாசத்தில் பரிசதன்மாத்திரையான வாயுவும்வாயுவில்ரூபதன்மாத்திரையான தேயுவும் தேயுவில் ரசதன்மாத்திரையான அப்புமஅப்புவில் கந்ததன்மாத்திரையான பிருதிவியும் உண்டாயின இந்தப்பஞ்சதன்மாத்திரைகளுக்கு அபஞ்சீகிருதபஞ்சபூதங்களென்றுஞ் சூட்சமபூதங்களென்றுஞ் சொல்லப்படும் இந்தச் சூட்சமபூதங்களினின்று சூட்சம சரீரங்களும் ஸ்தூலசரீரங்களுமுண்டாயின.

வினா. எப்படியென்னில்.

விடை. இந்த ஆகாசமுதலான சூட்சமபூதங்களில் முக்குணமுந் தொடர்ந்துநிற்கும் அதிற் சத்துவாமிசத்தால் பூதத்திற் கொவ்வொருமாத்திரையெடுத்துச் சமஷ்டியா யொன்றுக்கூட்டினது அந்தக்கரணங்களாம்.

வினா. அந்தக்கரணத்திலாகாசங்கூடினதற்கடையாளமேதென்னில்.

விடை. அந்தக்கரணமு மாகாசம்போல் சகல [illegible] கொடுத்துக் கிடப்பதே யடையா [illegible] விருத்திக்கு ஞானமென்றுபெயர்.

வினா. வாயுவினமிசங்கூடினதற்கடையாளமேதென்னில்.

விடை. வாயுவைப்போலலைகின்றதே யடையாளம் இப்படியலைகின்றவிருத்திக்குமனமென்றுபெயர்.

வினா. தேயுவினமிசங்கூடினதற்கடையாளமேதென்னில்.

விடை. தேயுவைப்போலவிடயங்களை இன்னதின்னதென்றுவிளக்கி வைக்கின்றதேயடையாளம் இப்படிவிளக்கி வைக்கின்ற விருத்திக்குப்புத்தியென்றுபெயர்.

வினா. அப்புவினமிசங்கூடினதற்கடையாளமேதென்னில்.

விடை. அப்புவைப்போல் சகலவிடயங்களினும்பற்றிநிற்றதேயடையாளம் இப்படி பற்றிநிற்கும் விருத்திக்குச் சித்தமென்றுபெயர்.

வினா. பிருதிவியினமிசங்கூடினதற்கடையாளமேதென்னில்.

விடை. பிருதிவியைப்போலச் சகலவிடயங்களிலுங் கடினமாயபிமானித்திருப்பதே யடையாளம் இப்படியபிமானித்திருக்கும் விருத்திக்கு அகங்காரமென்றுபெயர் இப்படியே அந்தக்

சூட்சுமபூதங்களின் சத்துவாமிசத்திற் பூதத்திற்கொவ்வொருமாத்திரையெடுத்து வியஷ்டியாய்த் தனித்தனியேவந்தது ஞானேந்திரியங்களாம்.

வினா. ஞானேந்திரியங்களின் குணமேதென்னில்.

விடை. சுரோத்திரமாகாசத்தினமிசமாகையால் ஆகாசகுணமான சத்தமாத்திரமறியும் தொக்கு வாயுவினமிசமாகையால் வாயுவின்குணமான பரிசமாத்திரமறியும் சட்சு தேயுவினமிசமாகையால் தேயுவின்குணமான ரூபமாத்திர மறியும் சிங்குவை அப்புவினமிசமாகையா லப்புவின்குணமான ரசமாத்திர மறியும் கிராணம் பிருதிவியினமிசமாகையாற் பிருதிவியின் குணமான கந்தமாத்திரமறியும் இவ்வைந்திந்திரியங்களுமொன்றோடொன்றுகூடாதபடியினால் இவைபூதங்களைக்கிரகித் தறியமாட்டாது அந்தக்கரணத்தில் ஐந்துமாத்திரையுமொன்றாய்க்கூடினதுகொண்டு ஐந்திந்திரியத்தினாலும்ஐந்துவிடயங்களையுமறியலாம் இந்தச்சாத்துவாமிசசமஷ்டியிலுண்டான அந்தக்கரணம் ஐந்துவியஷ்டியிலுண்டான ஞானேந்திரியம் ஐந்து ஆக பத்தும் ஞானசாதனமாகையால் அறிகருவிகளாம் இப்படியே அந்தச்சூட்சுமபூதங்களின் இராசதாமிசத்திற் பூதத்திற் கொவ்வொருமாத்திரையெடுத்துச் சமஷ்டியாயொன்றாகக்கூடினது பிராணாதிபஞ்சவாயுக்களாம்.

வினா. பிராணாதிபஞ்சவாயுக்களின் குணமேதென்னில்.

விடை. வியானவாயு ஆகாசத்தினமிசமாகையால் ஆகாசம்போற் சர்வசரீரமும் வியாபித்திருக்கும் பிராணவாயு வாயுவினமிசமாகையால் வாயுவைப்போ லிருதயஸ்தானத்திலிருந்து நாசிகாபரியந்தமலைந்துதிரிக்கும் அபானவாயு அக்கினியினமிசமாகையால் அக்கினியைப்போல ஜாடராக்கினியாய்ஜொலித்து குதஸ்தானத்திலின்று அன்னபானாதிகளைச்சீரணிப்பிக்கும் சமானவாயு அப்புவினமிசமாகையாலப்புவைப்போல் சரீரமத்தியநாபிஸ்தானத்திலின்று அன்னபானாதிகளைச் சகலநாடிகளிலு நிரப்பிநிற்கும் உதானவாயு பிருதிவியினமிசமாகையால் பிருதிவியைப் போல்கடினமாகக்கண்டத்திலிருக்கும்.

வினா. இந்தப் பஞ்சவாயுக்களல்லாமல்வேறுவாயுக்களுண்டோ வென்னில்.

விடை. வாந்திபண்ணுகிறது நாகனென்றும் இமைத்தலிருக்கின்றதுகூர்மனென்றும் தும்முகிறது கிருகரனென்றும் கொட்டாவிகொள்ளுகிறது தேவதத்தனென்றும் வீங்குகிறது தனஞ்செயனென்றுமைந்துவாயுக்களுண்டென்று சிலர்சொல்லுவார்கள்

ள் இவ்வைந்தும் பிராணவாயுவின் றொழிலேயன்றிவேறல்ல அந்தச்சூக்ஷ்மபூதங்களினிராசதாம்சத்தில் பூதத்திற்கொவ்வொருமாத்திரையெடுத்து வியஷ்டியாய்த்தனித்தனியேவைத்தது கன்மேந்திரியங்களாம்.

வினா. கன்மேந்திரியங்களின் குணமேதென்னில்.

விடை. வாக்கு ஆகாசத்தினம்சமாகையால் ஆகாசத்தினிடமாய் நின்று வசனிக்கும் பாணி வாயுவினம்சமாகையால் வாயுவினிடமாய்நின்று ஏற்றவிடுதல்செய்யும் பாதம் அக்கினியினம்சமாகையால் அக்கினியினிடமாய்நின்று நடக்கும் உபஸ்தம் அப்புவினம்சமாகையால் அப்புவினிடமாய்நின்று ஆனந்திக்கும் பாயுரு பிருதிவியினம்சமாகையாற் பிருதிவியினிடமாய்நின்று மலவிசர்க்கம்பண்ணும் இவ்வைந்துமொன்றோடொன்று கூடாதபடியினால் வேறுதொழில்செய்யமாட்டாது வாயுவில் ஐந்துமாத்திரையுமொன்றாய்க் கூடினதுகொண்டு கன்மேந்திரியமைந்திலுமைந்து தொழில் செய்கின்றது இந்த இராசதசமஷ்டியிலுண்டான வாயுக்களைந்தும் இராசதவியஷ்டியிலுண்டான கன்மேந்திரியமைந்தும் ஆகபத்தும் ஞானசாதனமாகையால் தொழிற்கருவிகளாம் இவ்விருபதுதத்துவங்களே சூக்ஷ்மசரீரம் இதைமாயாப்பிரதிபிம்பமானஈஸ்வரன் அவித்தையாப் பிரதிபிம்பமானஜீவர்களுக்குச் சிருஷ்டிக்கொவ்வொருசூக்ஷ்மசரீரங் கொடுத்துவருவர் இப்படிசூக்ஷ்மசரீரம் பெற்றுக்கொள்ளாதஜீவர்களுக்கு மறுசிருஷ்டியிற்கொடுத்தருளுவார் இந்தச்சூக்ஷ்மசரீரவபிமானி ஜீவனுக்குத்தைஜசனென்றுபேர் இப்படியேபஞ்சபூதங்களின் சத்துவாம்சமும் இராசதாம்சமுங்கழிந்து தாமதாம்சமாத்திரமிஞ்சிநின்றது இதுவே சூக்ஷ்மசரீரவுற்பத்தி.

வினா. ஸ்தூலசரீரவுற்பத்தியாவதேதென்னில்.

விடை. மிஞ்சிநின்ற தாமதாம்சத்திலுள்ள ஐந்துபூதத்தையுமொவ்வொன்றிரண்டாய்ப்பகுத்து முதற்பாதியைத்தையுமொன்று நான்காக்கி இரண்டாம்பாதியைத்தான தன்னம்சத்துடன்கூட்டாமல்மற்ற நான்குபூதத்துடனும் பூதத்திற் காலாக்காலாக்கால்மாத்திரையாகக்கொடுப்பதே பஞ்சீகரணம்.

வினா. இப்படி பஞ்சீகரணப் படுத்தியதற்குப் பிரயோசனமேதென்னில்.

விடை. பஞ்சீகரித்த ஸ்தூலபூதங்களில் ஆகாசத்திற் பரிசரூபரசகந்தங்களாகியநாற்குணமும் வியாப்பியமாகையால் அதிரிசயமாய்ப்போக நிசகுணமானசத்தம் திரிசயமாகும் வாயுவில்ரூபரசகந்தங்களாகிய மூன்குணமும் வியாப்பியமாகையால் அதிரிச

யமாய்ப்போக காரணகுணமானசத்தமும் நிசகுணமான பரிசமும் திரிசயமாகும் தேயுவில் ரசகந்தங்களாகிய இருகுணமும் வியாப்பியமாகையால் அதிரிசயமாய்ப்போக காரணகுணமான சத்தபரிசங்களும் நிசகுணமானரூபமும் திரிசயமாகும் அப்புவில்கந்தகுணம்வியாப்பியமாகையால் அதிரிசயமாய்ப்போக காரண குணமானசத்தபரிசரூபங்களும் நிசகுணமான ரசமும் திரிசயமாகும் பிருதிவியில் சத்தபரிசரூபரசகந்தங்களும் நிசகுணமாகையால் திரிசயமாகும் இதுவேஸ்தூலபஞ்சபூதங்களாம்

விகு. இந்தஸ்தூலபூதங்களினாலுண்டாகியதென்னவெனில்.

விடை. ஆறுதாதுவமாய் நால்வகையோனியாய் எழுவகைப்பிறவிகளாயுள்ளஸ்தூலசரீரங்களுண்டாயின.

விகு. ஆறுதாதுவேதென்னவெனில்

விடை. சர்மம் உதிரம் மாமிசம் சநாயு அஸ்திமச்சை இவைகளாம்

விகு, நால்வகையோனியாவதேதென்னவெனில்.

விடை. அண்டசம் உற்பீசம் சுவேதசம் சராயுசம் இவைகளாம்.

விகு. எழுவகைப்பிறவிகளாவதேதென்னவெனில்.

விடை. தேவர் மக்கள் புள் விலங்கு நிலத்திலூர்வன ஜலத்திலூர்வன ஸ்தாவரம் இவை எண்பத்துநான்கு லட்ச பேதங்களாயிருக்கும் ஈசுவரன் ஜீவர்களுக்கு இந்தஸ்தூலசரீரத்தையுண்டுபண்ணினார் இந்தவியஷ்டிஸ்தூலசரீரத்தையபிமானிக்கும் ஜீவனுக்கு விசுவனென்றும் சமஷ்டிஸ்தூலவிராட்டையபிமானித்தஈசுவரனுக்குப்பிரமனென்றும்பெயர்வியஷ்டிசூக்ஷமசரீரத்தையபிமானித்தஜீவனுக்குத் தைசதனென்றும் சமஷ்டிசூக்ஷம ஹிரணியகர்ப்பசரீரத்தையபிமானித்த ஈசுவரனுக்குவிஷ்ணுவென்றும்பெயர் வியஷ்டிகாரணசரீரத்தை யபிமானித்த ஜீவனுக்குப்பிராக்ஞனென்றும் சமஷ்டி காரண அவ்வியாகிருதசரீரத்தையபிமானித்தஈசுவரனுக்குருத்திரனென்றும்பெயர் இதுகளே மூவகை சரீரத்திரயங்களுண்டாயினமார்க்கமென்றுசொல்லப்படும் - இனி விசாரணைதனால் சரீரத்திரயங்களையும் லயப்படுத்திசாட்சியாகிய தன்னையுள்ளபடி யறியவேண்டியது.

விகு. சற்குரு சாஸ்திரமுன்னிலையில் ஜீவாதி சரீரத்திரயங்களை விசாரிக்கிறபடியுடனென்னவெனில்.

விடை. இந்த விசுவ தைசத பிராக்ஞனென்றுமிவர்களால் விசாரிப்பதென்றால் அந்தந்த அவஸ்தைகளுடன் அந்தந்த வபிமானிகளும் மடிந்துபோவதா லவர்களால் விசாரிக்கப்படுகிறஞானத்திற்கு மநித்தியம்வரும் ஆதலால் ஜீவஸாக்ஷியாயிருக்கின்றகூடஸ்தனே விசாரிக்கிறபடியுடன்.

வினா. அவ்விசாரணையின்வகை யெப்படியென்னில்.

விடை. சீவனுக்கு வாச்சியலட்சியார்த்தமான அசுத்தசுத்தங்களையும் ஈஸ்வரனுக்கு வாச்சியலட்சியார்த்தமான அசுத்தசுத்தங்களையும் பகுத்தறிகிறதேயாம்.

வினா. சீவனுக்கு வாச்சியார்த்தமான வசுத்தமேதென்னில்.

விடை. தூலசரீரத்தில் ஞானேந்திரியபஞ்சகம் ஒன்று கன்மேந்திரியபஞ்சகம் ஒன்று இவற்றைப் பகுத்தறிகிற அந்தக்கரணங்கள் நாலு இவைக்கெல்லாஞ் சேர்க்கைகொடுப்பதான பிராணாதிபஞ்சகம் ஒன்று இவ்வேழுமே காரியவுபாதி இவ்வேழுபாதிகளையுந் தானென்று சீவனபிமானித்ததே தொம்பதவசுத்தம்.

வினா. சீவனுக்கு லட்சியார்த்தமான சுத்தமேதென்னில்

விடை. இவ்வேழுபாதியுந் தானல்லவென்று கழித்து அவைகளுக்குச் சாட்சியாயிருப்பதே தொம்பதசுத்தம்

வினா. ஈஸ்வரனுக்கு வாச்சியார்த்தமான வசுத்தமேதென்னில்.

விடை. சர்வஞ்ஞன் சர்வகாரணன் சர்வேந்திரியாமி சர்வேசுரன் சர்வசிருஷ்டி சர்வஸ்திதி சர்வசங்காரன் என்னு மிவ்வேழுங்காரணவுபாதி இவ்வேழுபாதிகளையுந் தானென்று ஈஸ்வரனபிமானித்ததே தற்பதவசுத்தம்.

வினா. சர்வஞ்ஞனென்பதேதென்னில்.

விடை. சகலபிரபஞ்சங்களிலும் வியாபகமான செயல்களெல்லாம் அறிந்திருப்பது.

வினா. சர்வகாரணனென்பதேதென்னில்.

விடை. சர்வசகங்களு மழிந்தவிடத்துந் தானழிவற்று நித்தியனாயிருப்பது.

வினா. சர்வேந்திரியாமி யென்பதேதென்னில்.

விடை. சர்வஜகவிசாலமாகிய தேகேந்திரியாதிகளுக்கு முள்ளீடாய்நிறைந்திருப்பது.

வினா. சர்வேசுரனென்பதேதென்னில்.

விடை. சகலபிரபஞ்சங்களுக்குங் கர்த்தாவாய் விளங்கிநிற்பது,

வினா, சர்வசிருஷ்டியென்பதேதென்னில்.

விடை. சர்வசராசரப்பிரபஞ்சங்களையுஞ் சிருஷ்டித்திருப்பது,

வினா, சர்வஸ்திதி யென்பதேதென்னில்,

விடை, சர்வஜகங்களையும் பரிபாலனம்பண்ணிநிற்பது.

வினா, சர்வசங்காரனென்பதேதென்னில்,

விடை, சர்வஜகவிலாசங்களையுந் தனக்குளொடுக்கிநிற்பது,

வினா, ஈஸ்வரனுக்கு லட்சியார்த்தமான சுத்தமேதென்னில்,

யும் விடப்பட்டு சர்வமுந்தோன்றாமலிருக்கும் பரசுழுத்தியுங்கண்டேன்—அந்தச்சுழுத்தியையறிந்த வறிவாகிய பரதுரியமுங் கண்டேன் கூடஸ்தரும் பிரமமுமொன்றென்றுணர்ந்த சிவசாக்கிரமுங்கண்டேன் அநாதியாய் சகலசெகத்துந்தானாயிருந்ததும் இருந்தோமென்னும்வாசனையும்விடப்பட்டிருந்தசாட்சியே தானென்றுணர்ந்த சிவசொப்பனமுங் கண்டேன்—காணப்பட்ட ஜெகமெல்லாமறிவுரூபமென்றறிந்து அவ்வறிவும் விடப்பட்டு மனோலயமாகுமிடமாகிய சிவசுழுத்தியுங்கண்டேன் இந்தச்சுழுத்தியையறிந்தவறிவாகிய சர்வசாட்சியே தானாகக்கண்டனுபவிக்கும்சிவதுரியமுங்கண்டேன்—இந்தத்துரியமே சச்சிதானந்தமும் விடப்பட்டபரையாகியமகாகாரணசரீரமென்றும் இந்தத் துரியமுமிறந்தவிடம் அதீதமாகிய அத்தப்பிரமமென்றுங் கண்டேன் என்றுவிண்ணப்பஞ்செய்தசீடனை அவ்வாசிரியர் ஆதரணைபண்ணி அப்பா சகலவேதவுபநிடதார்த்தங்களிற்கூறப்படும்பொருளும் நம்முடைய வநுபவமுமிதுவேயாதலால் இதிற்சந்தேகவிடர்தம்வராமல் தேசுபதனபரியந்தமும் அநுசந்தானம்பண்ணி முடிவில்விதேககைவல்யத்தைப்பெறுவாயாகவென்றருளினார்.

மூன்றாவது-உற்பத்திப்பிரகரணமுற்றிற்று.

நான்காவது

# திதிப்பிரகரணம்.

அவதாரிகை.

முத்திப்பிரகரணங்கள் மூன்றினும் சமாதியில் அபரோட்சவாத்மானந்தவநுபவம் பெற்று தேகாதிப் பிரபஞ்சங்களனைத்துஞ் சொப்பனத்திற் கண்டபொருள்போலவிச் சுவானுபூதிமாத்திரமாய்விளங்குஞ் சீடனுக்குமேல் சகல விவகாரங்களுஞ் சுழுத்திபோலாகிச் சத்தாமாத்திரமானபிரமானந்தாநுபவ சாட்சாத்காரமுதயமாகும்பொருட்டுத் திதிப்பிரகரணங்கூறுகின்றார்.

(கலி)

திகழுஞ்சாத்திகமாய்நின்றே யிராசதந்தமத்தைநீக்கித்
திகழுஞ்சாத்திகத்தாற்செய்யு மிகத்தொழில்செய்திட்டாலும்
புகழுமாகுணந்தான்சட்டை போக்கல்போலாசாபாசத்
தகைறநழுவிமேலாங்குணங்களைத் தொடர்ந்துநிற்பார் (க)

தொடர்வருச்சமாதிதன்னைத் தொடர்பவரிருவராகும் *
படர்வுறுநாமரூப பவபந்தத்துறவைவிட்டுத் *
திடமுறச்சதாசமாதி செய்பவரொருவனந்த *
மடமையோடிருந்துமுள்ளின் மதித்திடாச்சமாதிசெய்வான் (௨)

இதன்பொருள்.

வினா. சொரூபசமாதியினின்று சச்சிதானந்தசொரூபமாத்திரமாக வெளிப்பட்ட சீவன்முத்தர்கள் திரும்பவும் விவகாரம்பண்ணுவார்களோவென்னில்.

விடை. பண்ணுவார்கள் அதனாலானியில்லை.

வினா. எப்படியென்னில்.

விடை. சீவன்முத்தர்கள் புனர்ஜன்மத்துக்கேதுவாயிருக்கின்ற ராஜோ தமோகுணங்களை விடுத்து முத்திக்கேதுவாகிய சத்துவகுணமாத்திரமாயிருந்து வர்த்தமானகாலத்தில் நேரிடுமனேகந்தொழில்களைச் செய்தாலும் அதனால்வருமவிகாரங்களொன்றுமவர்களைத்தகிக்கமாட்டாது.

வினா. அதெப்படியென்னின்.

விடை. சூரியாஸ்தமனமாகி அந்தகாரணமான ராத்திரிவந்த போதிலும் பொற்றாமரையானது மற்றதிலும்வாய் குவியாது மற்றைத்தாமரைகளெல்லாம் வாய்குவிந்துவிடும் அதுபோல அறிஞர்களும் மாயாகாரியமான நாமரூபப் பிரபஞ்சவிவகாரங்களிற் கூடியுங்கூடாது சகலதுக்கவிலக்ஷணராகி எந்தவிடத்திலும் அகண்டவியாபக சின்மாத்திரமாய் நிறைந்து இதமகிதங்களில் சமதிருஷ்டியுடையவர்களாயிருப்பார்கள் அவர்களையே நல்வழியினடப்பவர்களென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

வினா. ஆனாலவர்களொருவரோடுங்கூடாரோவென்னில்.

விடை. சாந்தி, விசாரம், சந்தோஷம், சாதுசங்கமென்னுஞ்சற்புருடர்களுடனே கூடி அவற்றினையே யாபரணமாகக்கொண்டிருப்பார்கள்.

வினா. அவர்கள் தமக்குக்கிடையாத போகங்களிலிச்சைகொள்ளாரோவென்னில்.

விடை. சமுத்திரமானது தனக்குள்ளகரையைக் கடவாமலுமே லொன்றை நாடாமலுமிருப்பதுபோலச் சீவன்முத்தர்களுந் தனக்குள்ளபோகத்தைப் போசிப்பதன்றி வேறு போகங்களையிச்சித்துநாடமாட்டார்கள்.

வினா. ஆதித்தன்போல இச்சாயத்தனையின்றி திரிகாலத்துவருந்தொழில்களைப் பற்றியும் பற்றுமனத்தோடிருந்து

நடத்திவருங்காலத்து அந்தச் ஜீவன்முத்தர்களிருக்குந் தன்மையேதென்னில்.

விடை. விடப்படாமை விடப்படல் விசாரம் தெளிவு வருந்தல் திருந்தல் திருந்தங்கூடுதல் யோசித்தல் தீர்த்தல் பார்த்தல் நிச்சயித்தலாகிய தன்மைகளுடனேயிருப்பார்கள்.

வினா. விடப்படாமையேதென்னில்.

விடை. துயரமற்றசுகநிலையிலிருக்கிற பெரியோர்களுடைய சற்சங்கம்.

வினா. விடப்படலேதென்னில்.

விடை. ரஜோ தமோ குணங்களைப்பொருந்திய துஷ்டர்களுடைய துச்சங்கம்.

வினா, விசாரமேதென்னில்,

விடை, யானுலகமோவென்றுபகுத்தறிவது,

வினா, தெளிவாவதேதென்னில்,

விடை, குருசாஸ்திரங்களினாலும் அறிவினாலுந் தீர்ந்தநிலை,

வினா, வருந்தலாவதேதென்னில்,

விடை. தன்னையறியும்வழியில் வருந்துவது,

வினா, திருந்தலாவதேதென்னில்,

விடை, சகலஜன்மங்களிலும் யானெனதென் றழுந்தாமற்செய்வ[து]

வினா, திருந்தல் கூடுதலேதென்னில்,

விடை, நல்லொழுக்கமாகிய. மெய்ஞ்ஞானவான்களோடு கூடுவது,

வினா. யோசித்தலேதென்னில்,

விடை, சர்வமுந் தானென்னக்கருதுவது,

வினா, தீர்த்தலேதென்னில்,

விடை, சரீரத்தில்வருஞ் சோபதாபங்கள்,

வினா, பார்த்தலேதென்னில்,

விடை, சர்வசராசரப்பிரபஞ்சங்களிலும் முச்சுடராய்நிறைந்து வியாபகப்பட்டிருக்குந் தனது சொரூபத்தையே கண்டிருப்பது,

வினா. நிச்சயித்தலேதென்னில்,

விடை, பிரமாதி ஸ்தம்பபரியந்தமும் நிறைந்துள்ளது சித்தென்றும் அவைகளெல்லாந் தன் வியாபகமேயென்றும் நிச்சயிப்பது இப்படிப்பட்ட தன்மைகளோடு ஜீவன்முத்தர்களிருப்பார்கள்,

வினா, சஞ்சிதப்பிறவி எதினால் வருமென்னில்.

விடை, முற்பிறவிகளிற்செய்த தபோபல முயற்சியினால் வந்து பொருந்துமேயன்றி வேறொருகருமத்தினாலும் வாராமற்

டாது - ஆகையால் சத்துவகுணமே மோட்சத்தைக்கொடுக்கும் மற்றஇரண்டுகுணமு மாயாகாரியமான ஜனனமரண சங்சாரது க்கத்தைக்கொடுக்கும்,

வினா, இந்தச் சத்துவகுணத்தை எவர்களடைந்திருப்பார்களெ ன்னில்,

விடை, இனிப்பிறவாத முடிந்தபிறப்பை யுடையவர்க ளடைந்தி ருப்பார்கள்,

வினா, ரஜோ தமகுணங்களை எவர்கள் கொண்டிருப்பார்க ளெ ன்னில்,

விடை, மண்டபத்தைத் தூண்கள்தாங்குவதுபோல சகல ஜீவர்க ளும் அவ்விருகுணமயப்பட்டுத் தாங்கிநிற்பார்கள் - ஆ கையால் சத்துவத்தைகக்கைப்பற்றி ராசத தாமதங்களைக் கைவிட் டவர்கள் சனனமரணப்பிரவாகத்தினின்று கரையேறினவர்கள்.

வினா. எப்படிகைவிடுவார்களென்னில்.

விடை. சத்துவத்தைப் பூண்டுகொண்டு ராசத தாமதங்களையுட னுல்வரும் பாசபந்தங்களையும் பாம்பானது தோலுரி த்ததுபோல நழுகவிடுவார்கள்.

வினா. அதெப்படியென்னில்.

விடை. சர்வமுந்தானாய் விளங்குகிறபடியால் தான்வேறு உலகம் வேறென்னுந் துவிதமயக்கமொழிந்து பிரமமாகிய சித் தினிடத்துண்டான நாமரூப கற்பனைகளெல்லாம் சமுத்திரஜல மே அலையாதிகளாகக்காணப்படுதல்போல் மித்தையேயல்லாமற் சத்தியமல்ல சோகமோகங்களும் பிறப்பிறப்புகளும் பிறப்பிற ப்பித் தவிக்கிறவர்களுமில்லை வந்ததும் போனதும் நினைந்தது மாகிய வொன்றுமில்லை ஏகமாகியுமனேகமாகியும் என்றைக்குமு ள்ளபொருளை எந்தவிடத்திலும் சர்வவியாபகமாய் வியாபித்து ச் சத்தாமாத்திரமாய் விளங்குவதென்று சஞ்சலரகிதமான நூகபு த்தியினலிருந்து சகலதுக்கங்களும்விட்டு சத்துவமாத்திரமா ய்மிஞ்சியிருப்பார்கள்.

வினா. இன்னுமெப்படியிருப்பார்களென்னில்.

விடை. சொரூபவியாபகத்தில் நின்று பூரணச் சந்திரப்பிரகாசம் போற்சாந்தியடைந்து மவுனாநந்தமாய் மணிப்பிரபை போற்றெளிந்து நிருமலமாய் நிகழ்காலத்துவரும் விவகாரங்களை ச்சமதிருஷ்டியாய்க்கண்டு பற்றியும் பற்றுதலின்றிச்செய்து தி னநமக்கு ஆமென்னும் விருப்பும் ஆகாதென்னும் வெறுப்புமற் று உதாசீனமாத்திரமாயிருப்பார்கள்.

வினா. சத்துவகுணத்தின் மாத்திரம் ஞானமெளிதிலுண்டாமென்பதெப்படியென்னில்.

விடை. உத்தமமானமூங்கிலில் விழுந்தபனிச்சுடரானது முத்துகளானதுபோலச் சத்துவகுணத்திற்சொன்மித்தவர்கள் மேலோர் நல்லோர் மித்திரர் தெளிந்தோர் அநித்தியங்களைத்துறந்த நித்தியமுத்தர் ஞானிகளென்னும் விசிஷ்டநாமங்களைப் பெறுவார்கள் அவர்களுக்கே ஞானமுமெளிதில்வரும்.

வினா அவர்கள்பற்றியும்பற்றாதுதொழில்செய்வதெப்படியெனில்

விடை. சூரியன் இச்சையின்றிக் கிரணங்களாற் பிரகாசித்திருக்க அந்தச்சந்நிதானபலத்தினால் கணம் நாழிகை சாமம்நாள் நட்சத்திரம் வாரம் பக்ஷம் மாசம் ருது ஆயனம் வருடமுதலானதுகளும் தோன்றுவதுபோல் சீவன்முத்தர்களும் செல்காலம் வருகாலங்களி லுள்ளபொருள்களைச்சிந்தியாமல் நிகழ்காலத்துவருங்கருமமாத்திரம்தமது சுவானுபூதியாகக்கண்டுவிவகரிப்பார்கள்

வினா. இப்படிவிசாரஞானபலத்தினால் அவிதபுத்திநீங்கி அத்துவிதானந்த சொரூபமாத்திரமான ஞானிகளைக் காமாதிகள்தொடர்ந்து வருத்தாதோவென்னில்.

விடை. இருப்புச்சட்டைதரித்தபுருடனை ஆயுதங்கள் வருத்தாததுபோல் சின்மாத்திரமாய் விளங்குஞ்ஞானியையுங்காமாதிகள் தொடர்ந்து வருத்தாதென்பதே துணிவு.

வினா. மோகமாகிய வற்சநாபிக்கொடிமுளைப்பதற்குமூலமாகியும் சோகமாகியசர்ப்பமிருந்த சாருமிடமாகியுமுள்ள தேகத்தைநானென்னுஞ் சத்தியபுத்தி யண்ணுவிக்கு மஞ்ஞானமூலமானது ஏகமாகியும் நித்தியமாகியுமிருக்கிற சொரூபசுபாவந்தோன்றின மாத்திரத்தில் வேரோடேநாசமாமென்று கூறிய சுருதி யுத்திப்பிரமாணங்களிருக்கச் சீவன்முத்தர்கள் நான்போனேன் வந்தேன் தூங்கினேன் விழித்தேனென்றுசொல்லலாமோவென்னில்.

விடை. அவர்களப்படிசொன்னாலும் கமலபத்திரோதகம்போற் பற்றற்றேயிருப்பார்கள் அவர்கள்சித்தஞ் சென்றவிடமெல்லாஞ் சிதானந்தமாய் ரமித்திருக்கும் அதனால் வாதனையில்லை அப்படியின்றி நாமரூபங்களிற்சித்தமானது பறந்துபோய்விழுமானால் மனமுங்கெடாது பந்தமும்போகாது ஆதலாற்காணும் பொருளேயில்லையென்று சர்வமுஞ் சித்தாய்க்கண்டால் மனமென்பதும்போய்விடும் அதுவேமோட்சமாகும்.

வினா. ஆனால்பிரபஞ்சவிவகாரத்தை ஞானிகளெப்படிகண்டிருப்பார்களென்னில்.

விடை. நானுமில்லை யதென்றும் விடயமுமில்லையென்றும் உருவமில்லாதவெளிபோல் தான்பரிபூரண சொரூபமென்றும் தனது சொரூபவியாபகத்தில் காணப்பட்ட நாமரூபங்கள் விளங்குகின்றதென்றும் தனது சச்சிதானந்த சொரூபத்தை யன்றி நாமரூபத்திற் காதாரமில்லையென்றும் சச்சிதானந்த மூன்றும் சொரூப சம்பந்தம் நாமரூபமிரண்டு மாயாசம்பந்தமென்றுங் கண்டு மாயாசம்பந்தத்தைவிட்டுச் சர்வமும் சத்தாமாத்திரமான சொரூபமேயென்று திடமாய்ப்பார்த்திருப்பார்கள் அங்ஙனமான பெரியோர்கள் ஆசையாகியகட்டெல்லாம் அசங்கற்பமாகியவாளாலறுத்து நானென்னுந் தேகபாவனையை நானென்றுகட்டியிருந்ததுதீர எல்லாமிறந்தசொரூபசுபாவமே நானென்று பாவித்த பாவனையினால் ஜெனனமரணமில்லாத முத்திசொரூபமாவார்கள்.

வினா. இந்தச்சீவன் முத்தர்களுக்கு ஏகம்தசமாய் இன்பமானசுகம்வந்தாலும் துக்கம்வந்தாலும் அந்தச்சுகத்தில் ரமித்தும் துக்கத்தில் வருந்தியுமிரார்களோவென்னில்.

விடை. அப்படியிரார்கள் சுகம் பயம் கோபம் துக்கம் பொறுமைமுதலிய விலைகள் வந்தவிடத்து மிதுகளொருபொருளாய்க்காணாது சத்தாமாத்திரமாய்க்கண்டு சுழுத்திபோல் விசுராந்தியடைந்து சொரூபபாவனைநீங்கா திருப்பார்கள் இதுவே சிவசாக்கிரம் இந்தச்சாக்கிரத்தினின்று ஒருநிமிஷமாகிலும் பிரியாதவர்களே சீவன்முத்தர்கள்.

வினா. சகலவாதனைகளுஞ் சுழுத்திபோலாகி விஸ்ராந்தியாய்த் தெளிந்த பூரணதிருஷ்டி யிமைக்காமல் சீவன்முத்தியடைந்த பெரியோர்கள் திரும்பவும் இந்தவுலகத்தில் வசிப்பார்களோவென்னில்.

விடை. மாயாமயமான ஆசாபாசங்களற்றுச் சகலவாசனைகளுநீங்கி அகத்திற் சின்மாத்திரமாகியும் புறத்திற் சகலஆசாரக்கிரியைகள்செய்து மிருப்பார்கள் அன்றியும் புறத்தொழில்கள் ஆரம்பித்துச் செய்கிறவர்கள்போற்காட்டி அகத்திலொருதொழிலுஞ் செய்யாதவர்களாய் அகங்காரரகிதராய் திடசித்தரா யிருப்பார்கள் அல்லாமலும் ஆகாசம்போலருவமாய் ஆவரணநீங்கிச்சகலநாமரூப அடையாளங்களும் விடுபட்டு வேண்டியவண்ணமுலகத்தின்கண்விளையாடுவார்கள்.

வினா. இப்படி சத்துவகுணத்தோடிருந்துஞ் சென்மமில்லையென்பதெப்படியென்னில்.

விடை. வறுத்தவிதையானது தீனிக்குதவியாகுமல்லாமல் முளைப்பதற்குக் காரணமாகாததுபோல சத்துவகுணமுங்கத்

தவாசனைக்குக் காரணமானவுதவியாய் ஜீவன்முத்தர்களி
டத்திருக்கிறபடியால்சென்மமில்லை.

வினா. சுத்தவாசனையாவதேதென்னில்.

விடை. சத்துவத்தைவிடாமல் ஒன்றான ஆத்மத்தியான மாத்திர
மாய்நிருவிகற்பமாயிருப்பதேசுத்தவாசனை இதுசுகமா
த்திரமாயிருப்பதால் இதில் சதாகாலமும் சுழுத்திபோல் லயப்ப
ட்டிருப்பவர்களே சதாசமாதியடைந்திருப்பவர்களாம்

வினா. சொரூபசமாதியடைந்தவர்க ளெத்தனைவிதமாயிருப்பா
ர்களென்னில்.

விடை. இரண்டுவிதமாயிருப்பார்கள்.

வினா. எப்படியென்னில்.

விடை. நாமரூபவிவகாரத்தொழில்களோடுங்கூடிச் சமாதிசெய்
பவர்களும் அவைகளிற் பயனில்லையென்றுதுறந்து ஏகா
ந்தமாய் தனியிடத்திருந்து சமாதிசெய்பவர்களுமா யிருப்பார்க
ள் அங்ஙனமானாலும் இருவர்களுக்குமோட்சபலமொன்றேயாகும்

வினா. அதெப்படியென்னில்.

விடை. இரண்டுபேரிதயங்களுஞ் சீதளமாத்திரமாயிருக்கும் அ
ச்சீதளமே அவர்களனந்தஜென்மங்களிற்செய்துள்ள த
போபலமென்று சொல்லுவார்கள் - அவ்வனுபூதியிற் சதாகால
முஞ்சுகித்திருப்பவனுடைய மனமானது ஏகதேசகாரியங்களிற்
பிரவேசித்துச் சலனமடைந்தாலும் அதனால்வருங்கவலைகளால் அ
வனுக்கொரு ஆனிவிருத்தியுமில்லை - அவன் சமநிஷ்டையாயிருந்
து உன்மத்தன்போலும் கூத்தாடி பாசாங்கடிப்பதுபோலும் ஒ
ருவருக்குத்தமுமின்றிச் சுகசமாதியிலிருப்பன் - ஆதலாலறிஞர்கள் வி
வகாரங்களைச்செய்தாலும் அதினின்று நீங்கிச் சதாநிஷ்டராய்சொ
ரூபசமாதியிலிருந்தாலும் இருவருக்கு மோட்சபலஞ் சமனாயிரு
க்குமன்றி உயர்வு தாழ்வுஇல்லையென்று சுருதிஸ்மிருதிகளிற்சொ
ல்லப்படுகின்றது.

வினா. விவகாரநீங்கிச் சதாநிஷ்டராயிருப்பவர்கள் எவிடத்தில்
வசிப்பார்களென்னில்.

விடை. அங்ஙனமானபரமயோகிகள் தூங்கினாலும் விழித்தாலும்
விவகாரங்கள்செய்தாலும் செய்யாதிருந்தாலும் சதா அ
ந்தர்முகதிருஷ்டியாயிருப்பதால் வீடு நாடு காடுகளெல்லாஞ் ச
மமாய்க்கண்டிருப்பார்கள் அவர்கள்மனம் எப்போதும் விஸ்ரா
ந்திபெற்றிருப்பதினாற் சீதளமாகவேயிருக்கும் - அதனால் ஜெகத்
தோற்றவும் அதிசீதளமான சொரூபமாகவேவிளங்கும்- இப்ப
டிப்பட்ட அந்தர்முகநிஷ்டையில்லாதவர்கள் வனங்களிற்குகை

குளிலாசனங் கட்டிக்கொண்டிருந்தபோதிலும் மனம் பகிர்முகப் பட்டிருப்பதினால் அத்தவனங்கள் குகைகளெல்லாம் வீடு நாடுக ளாகவே தோற்றிக்கொண்டிருக்கும் - ஆகையினால் ஒரு தொழி ல்களைச்செய்தாலுந்தொழில்களைநீத்துச் சுகசமாதியிலிருந்தாலு ம் அந்தர் முகதிருஷ்டியையுடைய அறிஞர்கள் மனம்விஸ்ராந்தி யடைந்து அதிசீதளமாய் சொரூபசமாதியிற் றுவேசுகித்திருக் கும் அவர்களுக்குச் சுருதிமயக்கமில்லையென்று சுருதிஸ்மிரு திகளிற் சொல்லப்படுகின்றது சித்தம்.

நான்காவது - திருப்திப்பிரகரணமுற்றிற்று.

ஐந்தாவது

# உபசாந்திப் பிரகரணம்.



## அவதாரிகை.

முற்பிரகரணங்கள் நான்கிலும் சொரூபசமாதியடைந்த நிஷ்டாபரனை சீடனுக்கு மேல்சென்றவிடமெல்லாஞ் சிதானந் தமாக ரமிக்கும் சகசானந்தானுபவமுதயமாகும்பொருட்டு உப சாந்திப்பிரகரணங் கூறுகின்றார்;

(கவி.)

வான்தாமனுடையோனிவந்திடலரிதுவந்து ............... *
மானவேதங்கள்கற்ப தரிது துவந்தாற்றலு ............... *
ஞானசாதகங்களெய்த லரிதுறநல்லினாலு................ *
மீனவஞ்ஞானமின்றி யிருத்தலிங்கரிதுகாண்னை ..........(௧)
விபரீதசம்சயங்கள் விள்ளவிதீர்ந்திட்டாலு.............. *
மபரோட்சந்தனிலஞ்ஞானமகன்றிடாதிருக்குமென்னிற் *
றவமெனுங்குருவந்தாலுஞ்சாத்திரங்களினுநீங்காத் ....... *
துவந்துவமுடையோனென்மதுரோகியென்றறையும்வேதம்

இதன்பொருள்,

வினா. சகலசந்தேகவிபரீதங்களும் விடுபட்டுப் பிரபஞ்சவிவகா ரங்களைத்துஞ் சூழ்த்துபோலாகிச் சதாநிஷ்டர்களாய் விஸ்ராந்திபெற்றிருக்கும் அறிஞர்களதுமனத்தில் ஒருவேளை ஏகதேசமாய்க் கன்மவசத்தினால் சமதிருஷ்டிநீங்கி அஞ்ஞானமா ன அசம்பாவனை தோற்றுமானால் அவர்களுக்குக் கதியில்லையோ வென்னில்.

விடை. அஞ்ஞனமான பெரியோர்களுள்ளத்தில் அசம்பாவனை வ
ரக்கணக்கில்லை - அவர்களுக்குக் கன்மமுமில்லை - அப்படி
யின்றி ஒருபோது எவ்வேதசத்தி லுண்டாகுமாறு லவர்க
ளுக்குக் கதியுமில்லை.

வினா அதெப்படியென்னில்.

விடை. இந்தப்பூமியின்கண் உற்பவிக்குங்காலத்தில் மானிடயோ
னியிற்பிறப்பதரிது பிறந்தாலும் வேதாத்தியயனத்திற்
குரியபிரமகுலத்திற் பிறப்பதரிது பிறந்தாலும் ஊமை செவிடு
குருடு நீங்கிப்பிறப்பதரிது பிறந்தாலும் பேடுநீங்கிப் பிறப்பதரி
து பிறந்தாலும் வித்தியாப்பியாசம் பண்ணுவதரிது பண்ணினு
வேதாத்தியயனம் பண்ணுவதரிது பண்ணினாலும் அவற்றில்நிரு
பிதமான கன்மங்களைச்செய்வதரிது

வினா. அந்தக்கருமங்களாவதேதென்னில்.

விடை. நித்தியம் நைமித்தியம் காமியம் - நிஷேதம் பிராச்சித்தம்
என ஐந்துவகையாயிருக்கும்.

வினா. நித்தியகன்மமாவதேதென்னில்.

விடை. ஸ்நானபாசன சந்தியாவந்தன ஜபஹோமதேவ தர்ப்ப
ண வைசுவதேவ பசுவந்தன முதலானதுகளாம்.

வினா. நைமித்தியகன்மமாவதேதென்னில்,

விடை. சங்கிராந்திபர்வம் அர்த்தோதயம் மஹாவுதயமுதலியபு
ண்ணியதினங்களில் நீராடல்முதலானதுகளாம்.

வினா, காமியகன்மமாவதேதென்னில்,

விடை, அசுவமேத ராஜசூய பவுண்டரீகமுதலான யாகங்கள்செ
ய்தல் சோமவாரவிரதமாதிகள் இதுகளைச் செய்தலாம்,

வினா. நிஷேதகன்மமாவதேதென்னில்,

விடை, பிறனில்விழையாமை கள்ளாமை கொல்லாமை கள்ளுண்
ணாமை பொய்யாமை முதலியநியமங்களைக் கொண்டிருத்தலாம்,

வினா, பிராச்சித்தகன்மமாவதேதென்னில்,

விடை. சாந்திராயணம் கிரிசரம் சலபக்ஷணம் வாயுபக்ஷணம் தீ
ர்த்தயாத்திரை முதலான கருமங்கள் செய்தலாம்,

வினா, இந்தகன்மங்களினாற் பயனென்னையென்னில்,

விடை, தேகமிருக்குமட்டும் நித்தியநைமித்திய கன்மங்களைச்
செய்துவந்தால் பிராரத்தம்போகும் காமிய கன்மத்தை
ச்செய்துவந்தால் சொர்க்கபோகமுண்டாகும் நிஷேத பிராச்சித்
தகன்மங்களைப் பண்ணிவந்தால் சஞ்சிதம் விடுபடும் அதனால்மு
த்திவருமென்று சிலர்சொல்லுவார்கள் அது முத்தியல்ல,

வினா, அதெப்படியென்னில்,

விடை. காமியகன்மத்தினால் ஞானம்வரமாட்டாது சொர்க்கபல மாத்திரம் வரும் - அதை யடைந்தாலு மீண்டும் ஜனனமரணம்வருமேயல்லாமல் முத்திவராது - நிஷேதகன்மமும்பிராயச்சித்தகன்மமும்புருஷனுக்குக்கன்மத்திலதிகாரத்தையுண்டுபண்ணி பிரத்தியவாயத்தைப் போக்காநிற்கும் - இந்தப்படி மூவிதகன்மமும் ஞானசாதனமன்றாகும், மேல்நித்தியநைமித்தியமான இரண்டுகன்மமு மூவிதப்பட்டிருக்கும்.

வினா, அவையெவ்வாறென்னில்,

விடை, சாத்துவகன்மம் ராசதகன்மம் தாமதகன்மமென மூவகை அவற்றுள் ராசத தாமதமான இரண்டுகன்மங்கள் ஜனனமரணதுக்கத்தை விருத்தியாக்கும் அதனாலும் ஞானம்வராது, சாத்துவகன்மமாத்திரமே சித்தசுத்தி யுண்டாக்குவதினால் ஞானசாதனமாம் - இப்படி கன்மத்தினால் ஏகதேசமாயுண்டாகுஞ்சித்தசுத்தியைக்குறித்து சிலர் ஞானபரம்பரையென்று சொல்லுவார்கள் ஆனாலும் இந்தச்சாத்துவகன்மம் பண்ணும்போதும் ஈஸ்வரார்ப்பணமாகப் பண்ணவேண்டும்.

இதற்குதாரணம் பிரபோதசந்திரோதயம்.

பறவைவரிச்சிறையிரண்டாற் பணிவிசும்பிற்படர்வதுபோற் பயனொன்றாம் — இறைவனுக்கர்ப்பிதமாகி மெய்யுறுதருவேதாகமங்க ளியம்பாநின்ற — பெறலருநற்கருமமுமே லகண்டசச்சிதானந்த பிரமஞானத் — துறுதியுமாமிரண்டாலு முயிர்களின்பவீடுபெறுந் துறையுமென்றான். — என்று முன்னோர்வாக்கியமிருப்பதினாலே நிஷ்காமியமாகச்செய்யுஞ் சாத்துவகன்மமுஞ் சித்தசுத்திக்குக் காரணமேயன்றி மோட்சகாரணமல்ல.

இதற்குதாரணம் ஞானசித்தி.

தவமாமன்னறக்கழுவிருந்தொடைனல்சக்கிலவழிகண்டனைத் — தவிருஞானம்விட்டருச்சனைமுதலியதவங்களிற்பிறப்பற்று — றுவரிசூழ்நிலத்துதித்திடோர்களின்டைனுமாயந்தோ — கவருடைமை யறிவகற்றிடுங்குருபரன் கழலடைந்தவரல்லால். — என்று கூறியதினால் நிஷ்காமியகன்மத்தினாற் சித்தசுத்தியுண்டாய் அதனால்சற்குருலாபமுண்டாய் அதனால் சிரவணாதிகமுண்டாய் அதனால் ஞானமுண்டாகும்.

இதற்குதாரணம் பிரபோதசந்திரோதயம்.

ஆற்றும்பயன்வேண்டாக்கருமமற்றக்கரணசுத்திதரும் — போற்றுஞ்சுத்திதரும்போதம் போதம்பிரமனுடனொன்று — மாற்றந்தருதானுந்தனுமே யுயர்வான்மறிநீர்த் துலக்கமெனத் — தோற்றுந்

திருமாயையிற்றன்னைத் துளக்கமின்றிக்காணுவனால் — என்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

வினா, ஈசுரார்ப்பணஞ்செய்வதில் சித்தசுத்திவருமானால் ஞானம் எதினால் வருமென்னில்.

விடை, சற்குருசாஸ்திரமுன்னிலையாகவே வரவேண்டும்.

இதற்குதாரணம் சிவஞானசித்தியார்.

ஞானநூறனையோதலோதுவித்தல் நற்பொருளைக்கேட்பித்தறான் கேட்டனன்று — ஈனமிலாப்பொருடனைச்சிந்தித்தலைந்துமிறைவனடியடைவிக்குமெழின்ஞானபூசை — ஊனமிலாக்கன்மங்கடபஞ்செபத்தியானமொன்றுக்கொன்றுயருமிவைபூட்டுவதுபோக- மானமையான்மேலான ஞானத்தாலரனையருச்சிப்பர் வீடெய்தவறிந்தோரெல்லாம்.

அபரோட்சாத்மானுபவதீபிகை,

சித்தியேவேண்டுமென்ற திடமுளோன் விசாரப்பண்ணை — லற்றுமில்பரிதியிற்றோடக்கிளிட்பிரகாசங்கண் — மற்றவைவிடப்பதார்த்தஞானமில்லாதுபோல — நித்தியவிசாரஞானமவைவிட்டான் ஞானமுண்டோ — என்றுங் கூறியிருப்பதால் விசாரஞானமுண்டாகும்பொருட்டு சகலகன்மங்களையும் ஈசுரார்ப்பணமாகச்செய்யவேண்டும் - அந்தபலத்தினால் சிவமே கிருபைகூர்ந்து சீவகாருண்ணியம் ஈசுரபத்தி பாசவயிராக்கியம் பிரமஞானமென்னுநான்குமே ஒரு திருமேனியாகக்கொண்டருளிய சற்குருவாயமுண்டாம், அதனால் சிரவணமுண்டாம், அதனால் மனனமுண்டாம், அதனால் நிதித்தியாசனமுண்டாம், அதனால் விவேகஞானமுண்டாம், அதனால் தன்னைத்தலைவனைப் பகுத்தறியவரும்,

இதற்குதாரணம் கைவல்யநவநீதம்.

வாராயென்மகனே தன்னைமறந்தவன்பிறந்திறந்து — தீராதசுழல் காற்றுற்றசெத்தைபோற்சுற்றிச்சுற்றிப் — பேராதகாலநேமிப்பிரமிப்பிற்றிரிவன்பாத — மாராயுந்தன்னைத்தானென்றறியுமவ்வளவுந்தானே * தன்னையுந்தனக்காதாரத்தலைவனையுங்கண்டானேற் — பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாய்ப் பிறப்பதீர்வ — னுன்னை நீயறிவாயாகி லுனக்கொரு கேடில்லை — யென்னை நீ கேட்கையாலேயீதுபதேசித்தேனே;

சிவபோகசாரம்,

தன்னையறியார்தலைவன் றனையறியார் — முன்வினையின் முடிவறியார்-பின்னைக்-குருக்களென்று பேரிட்டுக் கொள்வார்களையோ தெருக்களிலேநின்றுசிலர் — என்றுங்கூறப்பட்டிருக்கின்றது,

வினா, தன்னையறியும் விதமெப்படியென்னில்.

விடை. பிரபஞ்சத்திற் சத்தாதிவிடயங்களாகத் தோற்றும் இந்திரியவறிவெல்லாம் சீவன்றானேயுருவெடுப்பதாக அறியாமையினாற் சொன்னாயிடத்து இந்தப்பொறிவழிப்பார்க்குணும் நாமரூபங்களெல்லாம் இந்திரியங்கட்குத் தோற்றமேயன்றிச் சிதாபாசனான சீவனுக்கில்லையென்பது அநுபவமாகும் எப்படியென்றால் நற்சத்தந்துற்சத்தங்களென்றறிவது சுரோத்திரேந்திரியவறிவல்லாமல் சீவவறிவல்ல,

விஞ, அதெப்படியென்னில்,

விடை, செவிடர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச்சீவன் சத்தத்தையறியவேண்டும் அப்படிகாணுமையால் சத்தத்தையறிகிறவறிவு சுரோத்திரேந்திரியமே அதைச் சீவனறியாமையால் தன்பேரிலாரோபித்துக்கொண்டு நானேசத்தமறிகிறவனென்றதல்லாமல் சீவனுக்கு இந்தப்பின்னவறிவு காலத்திரயத்திலுமில்லை; தொக்கிந்திரியவறிவான பரிசமுஞ் சீவனேயறிவதானால் இமிர்நோய் கொண்டவர்களிடத்துஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச்சீவன் சீதோஷ்ணபரிசத்தையறியவேண்டும் அப்படிகாணுமையால் பரிசத்தையறிகிறவறிவு தொக்கிந்திரியமே அதைச்சீவனறியாமையால் தன்பேரிலாரோபித்துக்கொண்டு நானேபரிசமறிகிறவனென்றதல்லாமல் சீவனுக்குப்பின்னவறிவு காலத்திரயத்திலுமில்லை; நேத்திரேந்திரியவறிவான ரூபமுஞ் சீவனேயறிவதானால் குருடர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன்பஞ்சவன்னங்களையறியவேண்டும் அப்படிகாணுமையால் ரூபத்தையறிகிறவறிவு நேத்திரேந்திரியமே அதைச்சீவனறியாமையால் தன்பேரிலாரோபித்துக்கொண்டு நானே ரூபமறிகிறவனென்றதல்லாமல் சீவனுக்குப்பின்னவறிவு காலத்திரயத்திலுமில்லை; சிங்குவேந்திரியவறிவான ரசமுஞ் சீவனேயறிவதானால் தொய்வியம்பிறந்தவர்களிடத்துஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச்சீவன் ஷட்வகைசருசிகளைப்பகுத்தறியவேண்டும் அப்படிகாணுமையால் ரசத்தையறிகிறவறிவு சிங்குவேந்திரியமே அதைச்சீவனறியாமையால் தன்பேரிலாரோபித்துக்கொண்டு நானே ருசியறிகிறவனென்றதல்லாமல் சீவனுக்குப்பின்னவறிவு காலத்திரயத்திலுமில்லை, கிராணேந்திரியவறிவான கந்தமுஞ் சீவனேயறிவதானால் மூக்கிந்திரியமிலாதவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் நற்கந்தந்துற்கந்தங்களைப்பகுத்தறியவேண்டும் அப்படிகாணுமையால் கந்தத்தையறிகிறவறிவு கிராணேந்திரியமே அதைச்சீவனறியாமையினால் தன்பேரிலாரோபித்துக்கொண்டு நானேவாசனையறிகிறவனென்றதல்

ல்லாமல் சீவனுக்குப்பின்னைவறிவு காலத்திரயத்திலுமில்லை இப்படியிருக்க இவ்விந்திரிய வறிவுகளையெல்லாம் தன்னிடத்திலாரோபித்துக்கொண்ட ஆவரணமுழுதும் ஞானதிருஷ்டியினால் விட்டு இந்தப்பொறிகளாலார்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்கள் தனக்கில்லையென்று கண்டு நிரிந்திரியனாய் நிர்த்தேகனாயிருக்குங் கூடஸ்தசொரூபமே தானென்பது விசாரித்தறியவேண்டும் இந்தப்படியே வசனாதிவிடயங்களாகத்தோற்றுங் கன்மேந்திரியவறிவெல்லாஞ் சீவன் தன்னிடத்திலாரோபித்துக் கொண்டதல்லாமல் சீவனுக்கில்லை.

விஞா, அதெப்படியென்னில்,

விடை, ஊமைகளுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் வசனிக்கவேண்டும் அப்படிகாணாமையால் வசனிப்பது வாக்கிந்திரியமே - கையில்லாதமூடனுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் ஏற்றலிடுதல் செய்யவேண்டும் அப்படிகாணாமையால் ஏற்றலிடுதல் செய்வது பாணீந்திரியமே—காலில்லாத மூடனுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் நடக்கவேண்டும் அப்படிகாணாமையால் நடப்பது பாதேந்திரியமே லிங்கலேபண மில்லாதவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் போகிக்கவேண்டும் அப்படிகாணாமையால் போகிப்பது உபஸ்தேந்திரியமே—பலங்குறைந்து அதஞ் சுருங்கலானவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச் சீவன் மலவிசர்க்கஞ் செய்யவேண்டும் அப்படி காணாமையால் மலவிசர்க்கஞ்செய்வது பாயுரிந்திரியமே—இப்படியிருக்க இந்தக்கன்மேந்திரிய வறிவுகளையெல்லாந் தன்னைதாகக்கொண்ட ஆவரணம்விட்டுட்டு இவைகளாலார்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களெல்லாந் தனக்கில்லையென்று ஞானதிருஷ்டியாற்கண்டு அசங்கனாகிய கூடஸ்த சொரூபமே தானென்பது விசாரித்தறியவேண்டும்— இந்தப்படியே பஞ்சகோசங்களையுஞ் சீவன்தானென்று ஆரோபிதமாய்க் கொண்டதல்லாமல் சீவனுக்கில்லை,

விஞா, அதெப்படியென்னில்,

விடை, பருத்தேனிளைத்தேனென்பது ஆறாதத்துவமான அன்னமயகோசதாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை—உசுவாசித்தேன் நிசுவாசித்தேனென்பது பிராணமயகோசதாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை— சங்கற்பித்தேன் விகற்பித்தேனென்பது மனோமயகோசதாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை — நான் கர்த்தாபோக்தாவென்பது விஞ்ஞானமயகோசதாதாத்மிய மன்றிச்

சிவனுக்கில்லை — நான் அஞ்ஞானிமூடனென்பது ஆனந்தமய கோசதாதாத்மியமன்றிச் சிவனுக்கில்லை.

வினா. அதெப்படியென்னில்.

விடை. என்சரீரமென்னும்போது தான்வேறு சரீரம்வேறென்றும் என் இந்திரியமென்னும்போது தான்வேறு இந்திரியம்வேறென்றும், என்பிராணனென்னும்போது தான்வேறு பிராணன்வேறென்றும் என்மனமென்னும்போது தான்வேறு மனம்வேறென்றும், என்புத்தியென்னும்போது தான்வேறு புத்திவேறென்றும், என்சித்தமென்னும்போது தான்வேறு சித்தம்வேறென்றும், என் அகங்காரமென்னும்போது தான்வேறு அகங்காரம்வேறென்றும், என் அஞ்ஞானமென்னும்போது தான்வேறு அஞ்ஞானம்வேறென்றும், வருகிற அனுபவத்தினால் இவைக்கன்னியமாகக்கண்டு சாட்சியாகிய தன்னிடத்தில் ஆரோபிதமாய் விவகார தசையில் மாத்திரமிருக்கிறதென்று விசாரித்தறியவேண்டும்.

வினா இப்படியறிந்தவர்களுக்கு ஆரோபிதமில்லையோவென்னில்.

விடை. இப்படி சாட்சிமாத்திரமாயிருப்பவர்களுக்குச் சத்தமறிவதாகிய சுரோத்திரமும், பரிசமறிவதாகிய த்வக்கும், ரூபமறிவதாகிய சட்சுவும், ரசமறிவதாகிய சிங்குவையும் கந்தமறிவதாகிய கிராணமும், வசனிப்பதாகிய வாக்கும், ஏற்றலிடுதலாகிய பாணியும், கமனம்பண்ணுவதாகிய பாதமும், ஆனந்திப்பதாகிய உபஸ்தமும், மலவிசர்க்கம்பண்ணுவதாகிய பாயுருவும், உசுவாச நிசுவாசம்பண்ணுவதாகிய பிராணவாயுக்களும், சங்கல்பவிகல்பஞ் செய்வதாகியமனமும், நிச்சயிப்பதாகிய புத்தியும், அஞ்ஞானமாகிய அவித்தையும் பின்னமின்றி யபின்னமான அறிவுசொரூபமாய்க்கண்டிருப்பதால் விசாரித்தறிந்தவர்களுக் காரோபிதமேயில்லை இப்படி ஒருவிகாரமின்றி நிருவிகாரமாயிருக்க அவாந்தர கற்பனையான மனமயக்கத்தினாற் செனனமரணங்களுமுண்டானது போற்றோற்றியது.

வினா. அப்படியானால் ஜெனனமரண நரகசொர்க்கங்களனுபவித்ததாரென்னில்.

விடை. கன்மகாண்டத்தில் விதியாகச்சொன்ன புண்ணியகன்மங்களைத் தேகேந்திரியங்களாற்செய்து அதற்குத்தக்கதேவபோகங்களையும் தேகேந்திரியங்களே யனுபவித்தது - நிஷேதமாகச்சொன்ன பாவகன்மங்களைத் தேகேந்திரியங்களாற்செய்து அதற்குத்தக்க திரியக்காதிஸ்தாவர சரீரங்களெடுத்து துக்கரூபமான நரகங்களையுந் தேகேந்திரியாதிகளே யனுபவித்தது-இந்தத்தேகேந்திரியாதிகளையே தானென்னும் இதுகளாலார்ச்சிக்கட்டு

றுமாபோற் — றன்னியவைம்புலவேடர்கழலிற்பட்டுத் தலை
வனையுமறியாது அயருமாந்தொல்லுயிரை — மன்னுமருட்குரு
வாகிவந்தவரினீக்கி மலமகற்றித் தானாக்கிமலரடிக்கீழ்வைப்பான்.
என்றும் — சொரூபசாரம் — நனவிற்ற சேந்திரிய நாட்டியங்கள்
பார்ப்போங்-கனவின்மனக்கூத்தைக்காண்போ-நனவிற்-சுழுத்தி
யிலேயில்லாத சூனியக்கூத்தாடி-விழுப்பொருளாய்நாமிருப்போ
மே — என்றும் — தத்துவராயர்-ஞானவினோதன்கலம்பகம் - ஆலி
ராயினசெய்யுமைம்புலன்காளெம்முடைகையாங் - கலிகாள்பலரு
ணங்காண்மலங்காள்கரணங்களென்றும்-பலகாலருட்சொரூபான
ந்தனுர்பவனத்திருவாய் - மலாதளவுமவ்ரேவுங்களோ டெங்கள்
வாழ்வுகளே — என்றும் - போதாத்துகாம்-கற்பிதப்பொருள்கட
ம்மைக் கடவுளாய்க்கருதித்தொல்லை - யுற்பவத்தன்னிலிறமயு
ழைத்தனமெண்ணில்காலந் -தற்பரம்பொருளாய்வந்த தம்பிரான்
றடொழாதே - புற்புதக்கனவிற் பொன்றும் பூன்செயக்கருதி
னேனே — என்றும் - அவிரோதவுந்தியார் - அகுறுநிக்கோரான்
றலைம்புலனுனு-மிசையுமேற்கேடெமக்குந்தீபற - வெங்ஙனமெ
ய்துமென்றுந்தீபற - என்றும், தத்துவராயர் அமிர்தசாரம் - இந்
தாகுலமனிதர் சிசிசெவிமுதலா-மைந்தானுமீட்டியவல்லாரோவை
ந்திலொரு -வேட்கையகனையிடம்விட்டின்மீன்வண்டிவைகள்-வேக
ட்கைமுதலோரொன்றின்கெடி — என்றும்-திருவாய்மொழி - ஆவி
திகைக்கவைவர்குமைக்குஞ்சிற்றின்பப்-பாவியேனைப்பலநீகாட்டி
ப்படுப்பாயோ -தாவியவையங்கொண்ட தடந்தாமரைகட்கே - கூ
விக்கொள்ளுங்காலமின்னங் குறுகாதே - என்றும் திருவாசகம் *
அடற்கரிபோலைம்புலன்களுக்கஞ்சியழிந்தவென்னை *
விடற்கரியாய்விட்டிடுதிகண்டாய்விழுத் தொண்டர்க்கல்லாற் *
றொடற்கரியாய்சுடர்மாமணியேசுடு தீச்சுழலக் *
கடற்கரிதாயெழுநஞ்சமுதாக்குங்கறைக்கண்டனே — என்றும் *
கந்தரனுபூதி-கைவாய்கதிர்வேன்முருகன்கழல்பெற் - றுய்வாய்ம
னனே யொழிவாயொழிவாய்-மெய்வாய்விழி நாசியொடுஞ்செவி
யா - மைவாய்வழிசெல்லுமவாவினையே — என்றும் - நாலடியார்-
மெய்வாய்கண்மூக்குச்செவியெனப்பேர்பெற்ற -வைவாயவேட்
கையவாவினைக்- கைவாய் - கலங்காமற்காத்துய்க்குமாற்றலுடை
யார்- விலங்காது வீடுபெறும் — என்றும் சிவஞானசித்தியார்- ஒரு
புலனுகரும்போதங் கொன்றிலேயொன்றின்பாலும்-வருபயன்மா
றிமாறி வருந்திடுமெல்லாமாயு - மொருபொழுதணைரிலுண்டாமி
ல்லதிவ்வல்லல்வாழ்க்கை -மருள்கனவதுவும்போலமாயும்பின்மா

யமென்றே — என்றும் - தேவாரம் - வென்றிலேன் புலன்களைந் தும்வென்றவர்வளாகந்தன்னுட் - சென்றிலேனாதலாலேசெந்நெ றியதற்குஞ்சேய்யே - னின்றுளே துளும்புகின்றே னீசனேனீசனே யோ - வின்றுளேனாளையில்லே லென்செய்வான்றோன்றினேனே — என்றும் - பற்றறுபவத்தன்ன பண்டிழையைப்பெய்தவாற்றாற் செறிவுறும் மாயவாழ்க்கை கண்டொறுங்கேதுகின்றேன் - முற்று வர்த்துளவர்மூர்க்கரோயவர்களோடு. மடியனேன்வாழமாட்டே னாரூர்மூலட்டனே - என்றும் - புள்ளுவரைவர்கள்வர்புனத்திடை மைநத்துநின்று - துள்ளுவர் சூறைகொள்வர் தூநெறிவிளையவொ ட்டார் - முள்ளுடையிவர்கடம்மை மூக்கறுத்துன்பாதநீழ - லுள்ளி டைமறைந்துநின்றங் குணர்விலேலைத்தலாமே — என்றும் - பொ ய்யனைத்தையும்விட்டவர்புந்தியுள் - மெய்யனைச்சுடர் வெண்மழு வேந்திய - கையனைக்கச்சியேகம்பமேவிய - வையனைத்தொழுவா ர்க்கில்லையல்லலே — என்றும் - மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந் தாக்குமைவர்தம்மார்ப்பையவிழ்த்த - நோக்குவாரவர் நோய்வி னைவாராமே - காக்குநாயகன் கச்சியேகம்பனே — என்றும் - திரு வாசகம் - மாறுபட்டஞ்சென்னைவஞ்சிப்பயானுன் மணிமலர்த்தா ள் - வேறுபட்டேனைவிடுதிகண்டாய் வினையேன்மனத்தே - ஊற மட்டேயன்று மத்தர்கோச மங்கைக்கரசே - நீறுபட்டேயொளி காட்டும் பொன்மேனிநெடுந்தகையே — என்றும் - இந்திரியவய மயங்கி யிறப்பதற்கேகாரணமா - யந்தரமேதிரிந்துபோயருநர கில்வீழ்வேற்குச் - சிந்தனையைத்தெளிவித்துச்சிவமாக்கியெனை யாண்ட - வந்தமிலாவானந்த மணிகொடில்லைகண்டேனே — என் றும் - பரிபூரணப்பிரகாசம் - பந்தப்பாசங்களொருமூன்றும்பரம னிடையேயிருப்பதெனிற் - றெந்தப்புருடனொருக்காலு மசிய னாகலற்றுஞ்சா - னந்தப்பரமனையவன்றானறியாமையிலைப்ப ரனைப் - பந்தப்படுமோர் சீவனெனப்பார்ப்பான் பவத்தேபதை க்கின்றான் — என்றும் - சொரூபசாரம் - கண்ணலாற்கண்டதுண் டோ காதலாற்கேட்டதுண்டோ - விண்ணலாலேதும் விளைந்த துண்டோ - வெண்ணுங்கால் - கானலாறோடிவரக்கண்டதுபோற் றோற்றினுந் - தானலாதுண்டோ சகம் — என்றும் - போகம்பு வனம் பொருந்துமிடமெங்குந் - தேகங்கரணந் திரியுமேயாகில து - தன்னை நீயென்றுமயங்காதே - நெஞ்சமே - நின்னை நீகண்டறி ந்திருநில் — என்றும் - திருமந்திரம் - சீவனென்றுஞ்சிவனென்று ம்வேறில்லை - சீவனார்சிவனாயறிகிலார் - சீவனார்சிவனாயறிந்த பின் - சீவனார்சிவனாகியிருப்பரே — என்றும் - கடையவொழிந்தி ட்டிருந்தகனன்மர மடையவிழுங்கிய துவானவாறுபோ - லுடலெ

லொழிந்திட்டிருந்தசிவமுயி ரடையவிழுங்கியது வானவாறே— என்றும் - தன்னையறியத் தனக்கொரு கேடில்லை - தன்னையறியா மற்றுமே கெடுகின்றார் - தன்னையறியுமறிவையறிந்தபின் — தன்னைவிட்டு...தன்னையினிதுணர்ந்தேனே —என்றும் - எல்லாமறிவதறிவுதனைவிட்டே - யெல்லாமறிந்துமிலாபமிங்கொன்றில்லை — யெல்லாமறிந்த வறிவினையாவென்னில் - லெல்லாமறிந்த விறையென்னலாமே—என்றும் - பொன்வண்ணத்தந்தாதி - ஒழித்தேன்பிறப்பினை யூர்ந்தேனவலைசேயாங்கொற்றுள்ள— யிழித்தேனுடம்பினை மேலன்றிறீடை யிம்மனையும்—பழித்தேன் பழியே விளைக்கும்பஞ்சேந்திரியக் குஞ்சரமுந் — தெழித்தேன் சிவனடி சேர்ந்தேனினியெத்தெள்ளியதே — என்றும் — திருவம்மானை — மெய்யான தொன்றுமே மெய்ம்மைகாணம்மானை — மெய்யன்றி மற்றெல்லாம் மித்தைகாணம்மானை — என்றும் — கூறப்பட்டிருக்கின்றது.

வினா. இன்னுமெப்படியென்னில்.

விடை. சச்சிதானந்தசொரூபமாகியும் அகண்டத்துவமாகியும் அபரிச்சின்னத்துவமாகியும் சர்வவியாபகமாகியும் காலபரிச்சேத தேசபரிச்சேத வஸ்துபரிச்சேத ரகிதமாகியும் நிராமயமாகியுமிருப்பதே ஆத்மசொரூபமென்று சுருதிஸ்மிருதிகளும் உபநிஷத்து மகாவாக்கியங்களும் குருவாக்கியமுங் கூறப்படுகின்றது,

வினா. சத்தென்பதெப்படியென்னில்.

விடை. முற்பிறவிகளிற் செய்தநல்வினை தீவினைகளின்படி இந்தச்சரீரம்வந்ததென்று சொல்லுகையாலும் இப்போது செய்கின்றவினைகளுக் கினிமேற் பிறவிவருமென்பது சர்வானுபவமாய்க் கண்டிருப்பதினாலும் இப்படி திரிகாலங்களிலுமுண்டான சரீரமாத்திரமழிந்து தான்நித்தியமா யழிவற்றிருப்பதினாலும் சத்தென்பதாயிற்று,

வினா. சித்தென்பதெப்படியென்னில்.

விடை. பாலியாவஸ்தைமுதல் நடந்துவரும் விவகாரங்களிற்சிறிது மறந்திருந்தாலும் மற்ற விருத்தாந்தமெல்லாம் அமாவாசையிருளும் மேகாந்தகாரமும் மழைபிசியுங்கூடியகாலத்திலும் மூலைவீட்டில் முக்காடிட்டுக்கண்களைமூடிக் கவிழ்ந்துபடுத்திருக்கிற பருடனுக்கும் சூரியசந்திராக்கினி மின்மினி நட்சத்திரநேத்திர சாதனங்களொன்றுமின்றியிருந்தும் இன்னதின்னதென்று பகுத்தறியப்படுகிறதினால் சித்தென்பதாயிற்று.

வினா. ஆனந்தமென்பதெப்படியென்னில்.

விடை. தனதானிய தாரபுத்திரர்களால்வருஞ் சுகங்களை நெடுநா ளாய் ஒருக்கால்போலப்பலகாலுமனுபவித்து அதுகளா ல்வருஞ் சுகமெல்லாந் துக்கமாய்க்கைவிட்டுச் சுழுத்திசுகத்தை யே சதாநாடுகிறபடியால் ஆனந்தமென்பதாயிற்று.

இதற்குதாரணம் கைவல்யநவநீதம் — செய்மாந்தரஞ் செய்த வினைகளுடனருமெனிற் செல்காலமிவனுண்டலோ — கன்மானுபவ நரகசொர்க்கமெனில் வருகின்றகாலத்து மிவனுண்டலோ — வுன் மாதயாதனுவுடல்கடவுளுடன்மனுட வுடன்மாறிமாறியழியுந் — தன்மாயவுடல்கெடினு மிவனிருப்பதுகொண்டு சத்தென்பதெனாக்குமகனே — என்றும் - இருளாகமூடுஞ் சுழுத்தியிலிராத்திரியிலே ரவிசுடராற்றபொழுது — மருளாமலிருளையும் பொருளையுந்தெரிகின்ற வகைகொண்டுசித்தாகுமே — பெருவாழ்வுமிக்கதாயே தன்னிடத்தினிற் பெயராதபிரியமதனு — லருகாதபிரியஞ்சுகத்தில்வருமாதலா லானந்தமாமைந்தனே — என்றும் - சத்தேசித்தாகுமயலெனிலசத்தாமசத்தாலுற் சாட்சியெங்கே — சித்தேசத்தாகுமயலெனிற் சடமாஞ்சடங்களுக்குந் திறியுமில்லை — யொத்தேதோன்றியசத்துஞ் சித்துநல்சுகமாகு மூகத்துக்கோர் — வித்தேயன்னியமாகிற் சடமசத்தாஞ்சுகானுபவம்விளைந்திடாதே — என்றும் - வீயாதசத்துமுணம்விளங்குவதுதன்னுமேலாவேறென்றுலோ — வாயால்வேறெனிலதுவுமசத்தோசத்தோவசத்தேல்மலடிமைந்தன் — பேயாகாரியஞ்செயுமோ வசத்தெனவிப்படி யதையும் பிரித்துச்சொன்னு — லோயாதவவத்தையாங் குதர்க்கவிகற்பங்களைவிட்டொழிந்திடாயே — என்றுங் - கூறப்பட்டிருக்கின்றது - ஓர்கிரகம் ஓர்சரீரங்களைக் குறித்து அதற்குள்ளிருப்பவன்போற் கண்டமாகியும் பரிச்சின்னமாகியும் ஓர் தேசவியாபகமாத்திரமாகியுமிருப்பதால் இனி அகண்டமாகியும் அபரிச்சின்னமாகியும் சர்வத்தினுள்ளும் புறமும் வியாபித்திருக்கும் சர்வவியாபகமாகியுமிருக்கின்ற தலைவனாகிய பிரமசொரூபத்தையு மித்தப்படியே விசாரித்தறியவேண்டியது.

வினா. அதெப்படியென்னில்.

விடை. அகண்டபரிபூரண வியாபகமாகியும் அபரிச்சின்னமாகியும் காலதேசவஸ்துபரிச்சேதரகிதமாகியுமிருப்பதே பிரமசொரூபமென்று சுருதிஸ்மிருதிகளிற்சொல்லுகின்றது.

வினா. ஆகாசத்திற்கும் இந்தக்குணங்களிருக்கிறபடியால் அதுவே பிரமமென்று சொல்லலாமேயென்னில்.

விடை. ஆகாசமானது நான்குபூதங்களிலும் நிறைந்துசர்வவியாபகமாய் நிரவயமாயிருந்தாலும் சிருஷ்டிகாலத்து

ண்டாகிப் பிரளயகாலத்திலழிந்துபோவதினால் காலபரிச்சேதம்வரும்.

வினா. காலமே பிரமமென்றுசொல்லலாமேயெனின்.

விடை. காலமானது ஏகவியாபகமாய் நிரவயவமாய் எந்தத்தேசத்திலும் வியாபித்திருந்தாலும் தேசாசாரங்களால் காலக்கிரியைகளும் அதனாலுண்டாகும் பொருள்களுமாறி யழிவுவருகிறபடியால் காலத்திற்குந் தேசபரிச்சேதம்வரும்.

வினா. தேசமே பிரமமென்று சொல்லலாமேயெனின்.

விடை. தேசமானது எங்கும்வியாபித்திருந்தாலும் ஒருதேசத்திலுள்ளவஸ்து ஒருதேசத்திலில்லாமையினால் தேசத்திற்கு வஸ்துபரிச்சேதம்வரும்.

வினா. வஸ்துவே பிரமமென்றுசொல்லலாமேயெனின்.

விடை. வஸ்துவானது வியாபகமின்றிக் கண்டமாய் பரிச்சின்னமாய் அநித்தியமாயிருப்பதினால் வஸ்துபரிச்சேதமும் வரும் ஆகையால் காலத்தினால் ஆகாசத்திற்கும் தேசத்தினாற்காலத்திற்கும் வஸ்துவினால் தேசத்திற்கும் அழிவுவருகிறபடியால் இதுகள்பிரமசொரூபமாகமாட்டாது.

வினா. ஆனால்பிரமசொரூப மெவ்வகைப்பட்டதெனின்.

விடை. தேகேந்திரியாதிகரணங்களும் அவற்றின்றொழில்களு மின்றிக் காலதேசவஸ்து பரிச்சேதரகிதமாய் அகண்டபரிபூரணமாய் அபரிச்சின்னமாய் சின்மாத்திரமாயிருக்கின்றஅறிவுவியாபகமேபிரமசொரூபம்.

வினா. பிரமத்திற்குத்திரிவிதபரிச்சேதமுமில்லையென்பதேதெனில்

விடை. எந்தக்காலத்திலும் எந்தத்தேசத்திலும் எந்தவஸ்துவிலும் உள்ளும்புறமும் எள்ளிடமிடமின்றிச் சர்வவியாபகமாய் அறிவறியாமையற்று ஜெகசித்திரபடம்போலும் பர்வதம்போலுமசைவற்று நிஷ்டரணமாயிருக்கிறபடியால் திரிவிதபரிச்சேதமுமில்லையென்பதேதுணிவு - இதற்குதாரணம் - மெய்ம்மொழி.

பொன்னைத்தான்கண்டபேர்கள் பணியெனப்புகலார்போல — மண்ணைத்தானுடன்மயக்கு மாயதத்துவங்களாய்ந்தே — யுன்னைத்தானறியவிஷ்பவுருவுசைதன்யமாகும் — தன்னைத்தான்கண்டவர்க்குத்தானென்வேறுமுண்டோ — என்றும் - மூலசித்தி - என்றுமெக்காலமெங்குமியாருமறியவொண்ணாதேய — யின்றிமற்றொன்றுமின்றியிருந்தவாறிருக்கவிங்ஙன் — பின்னைமற்றுளவாய்ப்பேணியிதமிகப்பேய்த்தேர்போலிச் — சென்றிடச்செய்ததேயவ் விச்சைகையென் செப்பிடாயே — என்றும் - மகாவாக்கியம் — இக்குணங்களுடைய

பரப்பிரமமே நாமானோ மெவ்வாறெனின்—னைக்ககளுதியெனை
ச்சனிப்புமரிப்பின்மையினு னித்யமானோ—தொக்குடம்புபோ
லமலத்தின்றுவக்கின்மையினாற் சுத்தமானோ —மூட்கரணபோ
னசிக்குமறிவுபெறுமையிற்புத்த ருடைத்துநாமே — என்றும்-
அகங்காரவிருத்தி யெனப் பந்தமிலாமையின் முத்த மானோமிந்த
ச்—சகம்போலவிளைக்கு மிந்திரசாலமிலா திருக்கையினுஞ் சத்யமா
னோஞ்—சுகங்காணிற்றன்னையலாற் சுகமிலையென்றே பரமானந்
தமானோ—மிருங்காலதேசவஸ்து வெனப்பிரியாவானந்தவேட
னாமே—என்றும்- தத்துவப்பிரகாசம் - மூன்னைநற்சுருதியோதி
முடிவுறற்கரியதாக — வின்னமத்தேவர்மூவ ராய்த்துகற்கிடமோ
மேவத்—தன்னையிப்படியேகாணத் தானளித்தெனக்கோர்வார்த்
தை—சொன்னநற் சொரூபானந்த சோதியைத்தொழுதல்செய்
வாம்—என்றுங் கூறப்பட்டிருப்பதால் இதுவேபிரமாணசித்தம்.

வினா. ஆத்மா விகாரமின்றி நிர்விகாரியாயிருக்கத் தேகேந்திரியாதிகள் தொழிற்படுவதானால் அதுசுருதமோர் வஸ்துவென்று துவிதவாதிகள் சங்கிப்பார்களேயென்னில்

விடை. காந்தக்கல்லானது அசைவற்றிருக்க அச்சந்நிதானபலத்தினால் சடமானவூசிசேஷ்டித்து அக்காந்தத்தைப்பாய்ந்து பிடிப்பதுபோலும் சூரியனிச்சையின்றியிருக்க அச்சன்னிதானபலத்தினால் சடமானசூரியகாந்தக்கல்லிலக்கினிஜ்ஜ்வலித்து அதனால் பாகாதிகிரியைகள் நடப்பதுபோலும் ஆத்மப்பிரகாசத்தினாற்பிரதிபலித்த சாயையானதுவிருத்திரூபமாய் சாக்கிரசொப்பனங்களிலுள்ள விடயங்களை இந்திரியாதிவழிகளாலறிந்து விவகரிக்கின்றது சுழுத்தி மூர்ச்சைசமாதிகளில் விருத்தியின்மையால் ஒரு அறிதலும் விவகாரங்களுமில்லை ஆத்மசந்நிதானபலத்தாற்றொழிற்பட்டதன்றி யிந்திரியாதிகள்சடமேயாம்.

இதற்குதாரணம் சிவஞானபோதம்—கடக்குஞ்சரப்பன்னியுண்ணின் றெருத்தம்பைகபாதகன்னங் கன்மெட்டேபோலியக்குங் — கிடக்கும்நடத்தாவிடத்திவ் வுடம்புங்கிடக்கும் மொருத்தனடத்தாவிடத்தே * என்றும் - நிழற்பாவைகண்ணாடியிற் பாவையைகா — னிமிர்க்கும்முடக்கும் மிவன்செய்யுமெல்லாத்— தொழிற்பாலதாமிந்தவுடலஞ் செய்தொழிலுஞ் — சுடர்ஞானவடிவானவன்செய்தசெதொழிலே * என்றும் - கைவல்யநவநீதம் - செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குங் காந்தக்கிலைமலைமுன் னிரும்புகள் சேட்டிக்குமாபோற் — செய்கையுஞ்செய்விக்கையு மற்றிருக்குமென்முன்செடமானவுலகமெல்லாஞ் சேட்டைசெய்யு — மெய்கலந்தவிந்திரியவிகாரரூப_ விவகாரவிருத்திக்கும் விருத்திதானாய்

— மெய்கலந்தசமாதிக்குஞ் சாட்சியேநான்வெயில்போலென்று
ரைத்தவனைவிபுமாகர்த்தன் * என்றுங்கூறியிருப்பதினால் இது
வேபிரமாணசித்தம்.

வினா. இந்திரியாதிகள் தொழிற்படாது சடமாயிருந்தாலுந் து
விதமேயன்றி அத்துவிதமல்லவென்று சொல்லுவார்களென்னில்.

விடை. தொண்ணூற்றாறு தத்துவமென்பது சகலமதத்துக்கும்
பொதுவென்றும் சைவர்களுக்கு (கூ௰௬) வேதாந்திக்கு
(உ௪) மாயாவாதிக்கு (உ௫) வயிணவனுக்கு (உ௬) தத்துவங்களெ
ன்றும் பின்னும்பதினெழுதத்துவமென்றும் பத்தென்பதுதத்
துவமென்றுஞ் சொல்வதெல்லாம் சொன்மாத்திரமேயன்றிப்ப
ஞ்சதன்மாத்திரையைத்தவிரக் காலத்திரயத்திலுமில்லை - எப்படி
யென்றால் சத்தமென்றறிகிறபோது சத்தமுஞ் சத்தமென்றறிந்த
வறிவுமாத்திரமன்றிச் சமானவாய்வு சோத்திரேந்திரியம் வாக்கி
ந்திரியம்வசனாதிவிடயங்களுமில்லை - பரிசமென்றறிகிறபோது ப
ரிசமும் பரிசமென்றறிந்த வறிவுமாத்திரமன்றி மனம் வியானவா
ய்வு தொக்கிந்திரியம் பாணீந்திரியம் தானாதிவிடயங்களுமில்லை -
ரூபமென்றறிகிறபோது ரூபமும் ரூபமென்றறிந்த வறிவுமாத்தி
ரமன்றி புத்தி உதானவாய்வு நேத்திரேந்திரியம் பாதேந்திரியம் க
மனாதிவிடயங்களுமில்லை - ரசமென்றறிகிறபோது ரசமும்ரசமெ
ன்றறிந்தவறிவுமாத்திரமன்றிச் சித்தம் அபானவாய்வு சிங்குவேந்
திரியம் உபஸ்தேந்திரியம் ஆனந்தவிடயங்களுமில்லை-கந்தமெ
ன்றறிகிறபோது கந்தமும் கந்தமென்றறிந்தவறிவுமாத்திரமன்
றி அகங்காரம் பிராணவாய்வு கிராணேந்திரியம் குதேந்திரியம் ம
லவிசர்க்காதிவிடயங்களுமில்லை இந்தப்படி தன்மாத்திரைகளைத்
தவிர வேறேதத்துவங்களில்லாமையாலும் தன்மாத்திரைகளைப்
பிரத்தியேகம் பிரத்தியேகமாய்ப்பிரித்துப்பார்க்க அதுகளுந்த
னியே ஒன்றைவிட்டொன்றில்லாமையினாலும் ஐந்துமொன்றாக
வேயிருப்பதினாலும் இதுகளுக்குக்காரணமானவிட்சேபசத்தியும்
விவேகித்தவிடத்திலில்லாதிருப்பதினாலும் அந்தவாவரணமுமொன்
றுந்தெரியவில்லை யென்றறிந்த வறிவுமாத்திரமாகி அறிமையெ
ன்ற அஞ்ஞானம் நசித்துவிட்டது பின்னுந்தனக்குள்ளே சகலத
த்துவங்களுந்தோன்றி வளர்ந்து ஒடுங்குவதென்று கண்டவறி
வேமகாகாரணமான மூலப்பிரகிருதி அதுவுஞ் சொன்மாத்திர
மேயன்றி ஒருபொருளல்ல.

வினா. அதெப்படியென்னில்.

விடை. தன்னிடத்தொன்றுஉண்டானாலல்லவோ இருக்கவேண்டும்
இருந்தாலல்லவோ லயிக்கவேண்டும் அப்படி உண்டாக

வுமில்லை வளரவுமில்லை யழிக்கவுமில்லையென்றறிந்த வறிவுமாத்தி ரமாயிருப்பதே மூலப்பிரகிருதிரகிதமான பிரமசொரூபம்.

இதற்குதாரணம் - தத்துவரத்தினாகரம் - தத்துவம்பலவெனச்சா ற்றுவார்சிலர் — பித்தர்களெனுமிடம் பேசவேண்டுமோ - வத் துவின்வடிவலதன்றிநின்றதின் - மைத்தனைத்தத்துவ மின்மையின் மையே * என்றும் - இந்திரியிருடோ டீரண்டெனத் - தந்திர மோதுவர் சார்ந்தமேலவர் - இந்திரியம்பலவென விசைத்தபேரெ லாம் - வந்ததுமலமா மருவிகாரமே * என்றும் - வேறு கோடிதத்துவ மென்னினுங்கோதிலா - நீடுதற்பர நின்றதுமற்ற வை - யோடசித்துசித்தாகிமூன்மையிற் - மீநிறப்பலபேசல்பி தற்றலே * என்றும் - போதாமிர்தம் - பன்னுவர்பலபலதத்துவ ங்களை - மன்னியபரபூரணராதமாந்தர்க - டன்னில் தனையுணர்வி ன்றபோதினி - லன்னியமிதுவெனவறையலாவதே * என்றும் — கோனுமாத்திரையாகுமிழிகொள்ளைநீர் - வேலையிற்பிறிதென விளம்படாவதோ - யாவுதத்துவம்பல சாற்றுமாயினும் - மூலநற் சிவமதே முடிவினுள்ளதே * என்றும் - சிவப்பிரகாசதரிசனம் - ஒன்றதென்றிடலாவதுமொன்றற - நின்றதத்துவ நின்மலபோத மே - பின்னையொன்றுள தென்றல்பெருட்பிழை - யென்றுவேத மியம்பியதல்லவோ * என்றும் - முதுமொழி - தத்துவத்தையு ணருந்தலைவனா - யொத்ததப்பி லொருவனென்றுள்குவார் - நித் தநிர்க்குணநின்மலனென்றனா - ரத்தனுக்குமவர்நரகெய்துவார் * என்றும் - சமயசூடாமணி - வடம்படக்கோத்தமணிநூலைமூலால் போன்மன்னுயிராக்கைகட்கெல்லா - மிடம்படக்கோத்து நின்ற துங்கொன்றேயெனுமிடமேனைமைகள்பாரிற் - கடம்பலபேதப்பட் டமாத்திரமே கடத்திலுளாகாசப்போலு - மடப்பினிலொளியை ப்பார்த்த போதெல்லாமொருவனே யம்பிறிவேறுளதோ * என் றும் - சொரூபசாரம் - பூதாதியைந்தும் பொறிபுலன்களெல்லா ஞ்சித் - தேதாதியந்தமவை யெல்லாஞ்சித் - தோதரிய - கற்பனை யுஞ்சித்தனைத்துங் காண்பானுங்காட்சியுஞ்சித் - தற்பரமும்வேறில் லாமையால் * என்றும் - பார்த்ததிசையெல்லாம் பரிபூரணசொ ரூபந் - தீர்த்தமெல்லா மானந்த சிற்சொரூபஞ் சீர்த்திக்குந்- தோத்திரங்களெல்லாஞ் சுகசொரூபதன்மையலால் - வேற்றுருவ மேதாகுமே * என்றும் - சிற்சொரூபந்தானே சுகசொரூபமா னவெலாந் - தற்சொருபசாரமாய்ச்சாற்றவே - பொற்சொரூப - மச்சுருவப்போலவது வதுவாய்த்தோற்றமொரு - சொச்சொரு பந்தானே துணை * என்றும் - வாசிட்டம் - உவரிநீர்போலுலகெ ல்லா மொன்றென வுணர்வுமாத்திரமதுதானுற்றபுந்தி - கவர்வுற

ஜலாலசையுநிலநிடு நீர்ஞான்கல்லோலத்தாலசையுங் கனக்கேபோ
லச் - சிவருணர்வுமாத்திரமே பிரமமாகி இகழ்வெயராய்ப்புகல்,
பொருளைச் செகமென்றெண்ணித் - தவமறுபேதையர் காண்பர
றிவுதானே சற்றுமெழுந்தமாத்திரத்திற் சருக்கமுண்டாம் ※ என்று
ம் - பெரும்பெரியவடிவான பிரமமேயாதலாற் பிறிதொன்றில்
லை - வரும்பொருளெல்லாம் பிறிவின்கனவதுயாயிருந்தவிவி
வையமெல்லாம் - கருப்புயலையறிவேயாங் கற்பனையேயிவையா
ற்காணப்பட்ட - வரும்பொருள்கடமிலறிவுண்டாதலின்றலறிவொபொ
ருளாமனைத்துமில்லை ※ என்றும் - அலறாதிமுல் - சர்வாகம் ※
சர்வஞ்சூன்யம் மனஸ்சூன்யம் சத்தாசத்யவித்யதே - சோபா
வாபாவிதம்புரோக்தம் சாஸ்த்ரசம்மதி பூர்வகம் - என்றுங் கூ
றப்படுகையால் இதுகளே பிரமாணசித்தம்.

வினா. இப்படி அவித்தவஸ்தவின்றித் தானே தானாயிருக்கிறத
ன்னிடத்தில் அவித்தபாவனைகளான விபரீதங்களெப்படி
யுள்ளதாகத் தோற்றியதென்னில்.

விடை. இல்லாதவற்ஞானத் தோற்றமான புகல்வழிகளால்கால
த்திரயத்திலுமில்லாத சத்தமித்தையான விபரீதபாவனைக
ள் இல்லாத கானற்சலம்போ லுள்ளதாகத் தோற்றியது.

வினா. உள்ளவஸ்துவிலுள்ளது தோற்றுமேயன்றி இல்லாது
தோற்றுதேயென்னில்.

விடை. உள்ள இரும்பில் இது ஆயுதமெனத்தோற்றியது இல்லாத
வாயுதந்தோற்றுமா உள்ள இரும்புதானே தோற்றினது
உள்ள பொன்னில் இது ஆபரணமெனத்தோற்றியது இல்லாதவா
பரணந்தோற்றுமா உள்ளபொன்தானே தோற்றினது, உள்ளமண்
ணில் இது கடமெனத்தோற்றியது இல்லாதகடந்தோற்றுமா உ
ள்ளமண்தானே தோற்றினது - உள்ள மரத்தில் இது கரிபரிகளெ
னத்தோற்றியது இல்லாதகரிபரிகள் தோற்றுமா உள்ளமரந்தா
னே தோற்றினது - உள்ளசமுத்திரத்தில் இது அலைநுரைகுமிழி
யெனத்தோற்றியது இல்லாத அலைநுரைகுமிழி தோற்றுமா உள்
ள சமுத்திரந்தானே தோற்றினது - உள்ள ஆகாசத்தில் இது நீலபீ
தமெனத்தோற்றியது இல்லாதநீலபீத வர்ணங்கள் தோற்றுமா உ
ள்ள ஆகாசமே தோற்றினது - உள்ள கட்டையில் இது கள்ளனெ
னத்தோற்றியது இல்லாதகள்ளன் தோற்றுவானோ உள்ளகட்டை
யே தோற்றினது - உள்ளபழுதையில் இது பாம்பெனத் தோற்றி
யது இல்லாதபாம்புதோற்றுமா உள்ளபழுதையே தோற்றினது
இத்ததிருஷ்டாந்தங்களைப்போல சச்சிதானந்தசொரூபமானதன்

விடத்தில் இது நாமரூபமெனத் தோற்றியது உள்ள சச்சிதானந்த மே தோற்றினதன்றிக் காலத்திரயத்திலு நாமரூபந் தோற்றவே யில்லை.

வினா. அதெப்படியென்னில்.

விடை. இருக்கின்றது சத்து அந்தச் சத்துதானே நாமரூபமான சித்தாய்த் தோற்றியது அந்தச் சித்தைவிட நாமரூபமென்பது காலத்திரயத்திலு மில்லாமையாலும் சத்தைவிடச் சித்தென்பது வேறேயில்லாமையாலும் இரண்டாம் வஸ்துவில்லை அந்தச் சத்துக்குஞ் சித்துக்குமிடையேயுள்ள ஆனந்தமான சகந் தோற்றமேயன்றி இல்லாதமாயையானது காலத்திரயத்திலுந் தோற்றமாட்டாது.

இதற்குதாரணம் - வாசிட்டம் - ஆகவிருவிதொன்றுஞ் செய்ததல்ல வுத்தவாவிச்சகமில்லை யறிவுமட்டு - மேதகுசகத்தமே வோதாவாகுமெய்யாகவறிவன்றி வேறொன்றில்லைச் - சேதனமாத்திரத்துதித்த திருட்டியந்தச் சேதனமே யாமென்று செப்பலாகு - மோதியசெய்வோன் பொசிப்போனிரண்டுமல்ல வுபயவத்திரிபிரமமே யுள்ளவெல்லாம் * என்றும் - பொருகடலிற்றிரைமுதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகிவிளங்குமாற் பழுதியாமோ — பொருபொருளாம் பிரமமாத்திரமேயல்லா லுபயமெனுங்கற்பனைப்பொன்றுமில்லை — யெரியிடத்திற் சூடுமாத்திரமேயல்லா லிரண்டென்றேவ்வகையோ லென்றுமொன்றுஞ் — சரியையிரியா யோகமுதலின் முத்தி சாதனங்களிறந்தவர்க்கேசாற்றல் வேண்டும் * என்றும் - அத்துவித வுண்மை - தங்கமொன்றேபணிதினிற் சாற்றும்விதங்கள் வெவ்வேறு — தங்கவிலக்கணமென்று தங்கந்தவிரவேறன்று — தங்கமறியாப்பணியறியிற் சாற்றியிதந்தன்மையே போ — லெங்குநிறைசச்சிதானந்தமிலக்குமிதவுலகமே * என்றும் - தங்கமொன்றே பணிதகளிற் சாற்றும்விதயாய்விளங்குதலி — லங்குமுதலாஞ் சகங்களாயறிவேவிளங்குமயலில்லை — இங்கங்கென்றேயங்கொன்று மில்லையகண்டவறிவொன்றே — தங்கவறிவுதோன்றவுந் தோன்றுநாளுவிதரூபம் * என்றும் - கைவல்யநவநீதம் - காலனாரினிக்சல் வெள்ளிக் கந்தர்ப்பநகர்களுளூர் — வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு — பேணமாந்தறிபுமானிற் பிரபஞ்சமெல்லாம்பொய்யே — ஞானமெய்மகனேயுனை நம்மானைமறந்திடாயே * என்றும் - பிரமாணங்களிருப்பதினால் காலத்திரயத்திலும்மாயை தோற்றமாட்டாதென்பதே துணிவு.

வினா. மித்தையான நாமரூபங்கள் காலத்திரயத்திலுமில்லாத அக

ண்டசச்சிதானந்த சொரூபமாத்திரமாயிருக்க இந்தச்சனனமரணாதிகளான தாபத்திரயங்களும் ஜீவபாவங்களும் பந்தமோட்சங்களுமுள்ளதாகத் தோற்றியதெப்படியென்னில்.

விடை. ஆத்மாவை தேகேந்திரியாதிகளென்றும் தேகேந்திரியாதிகளை ஆத்மாவென்றும் விபரீதமாகக்கண்டதே யஞ்ஞானம் அவ்வஞ்ஞானத்தினால் ஆத்மாவாகியவனே அநேகவித நாமரூபங்களாய்க்கண்டபோதே அந்தவிபரீதவறிவு இவ்விதமாவந்தோற்றியது.

விரு. அதெப்படியென்னில்.

விடை. மேகமண்டலமானபோடச் சந்திரனோடுவதுபோலும் சலமசையநிச்சலமான சந்திரனசைவதுபோலும் ஓடம்போகிறவனுக்குக் கரையினிடத்துள்ள விருக்ஷமரமோடுவதுபோலும் பித்தமேறிய கட்குழியினால் வெளுப்பான சங்கு மஞ்சளாவதுபோலும் கொள்ளிக்கட்டை சுழற்றினால் சூரியவட்டமாய்த் தோற்றுவதுபோலும் காற்றடிக்கையிற்சுழலுருக்கும் சக்கரமாய்த் தோற்றுவதும்போலும் கானலோடச் சலமோடுவதுபோலும். கண்ணோடியினது ரசமோடத்தினால் சலவிருக்குமிடத்துச் சலமின்மையாகவும் சலமின்றியவிடத்து சலமுள்ளதாகவும் தோற்றுவதுபோலும் ரசக்கண்ணாடிக்கெதிரிருந்த வீடுவாசல்கள் பிறபுறந் தோற்றுவதுபோலும் அஞ்ஞானத்தினால் நாமரூபமான இவையாவுந் தோற்றியது.

இதற்குகாரணம் - அபரோட்சாநுபவதீபிகை.

ஆத்மாவைத்தான் தேகமென்று மறிந்தார் பொன்னைப்பணியென்றார் — மானிடனாய்த்தானே மன்னனைக்கண்டாய் நிச்சயித்தா — நானதற்கதைப்படமென்றே யறநிச்சயித்தாரதுபோலுமானமுடம்பதனாலே யான்மாத்தேகமென வறிந்தார் * என்றும் — அரியமணியை நெருப்பென்று மறிந்தார்போல முகிலோடச் — செறிசந்திரன் றோடுதல்போற் செலமேயசையச்சந்திரன்று — னறியவசையுமென்றதுபோ லஞ்ஞானத்தாலான்மாவைப் — பிறியாதேகமாயறிந்தார் பின்னமான வவித்தையினால் * என்றும் — அவித்தையினாலேயான் மாவிடத்திலிற் றேகமென்று — நவிற்றியவத்தியாச நாமமுண்டாயிற்றென்றே — யவித்தைபோய் விவேகந்தன்னை லறியவே யான்மாவுந் — தவித்திடாப் பரமான்மாவு மயிக்கியந்தாவரங்கள் * என்றும் - கூறப்பட்டிருப்பதினாலும் இப்போதும் ஞானதிருஷ்டியாய்ப்பார்த்தவிடத்தில் பார்க்கிறவன் பார்க்கிறது பார்க்கும்பொருளாகிய மூன்றும் பஞ்சப்புலன்களோடுமிந்த ஆதித்தப்பிரகாசத்தினுள் இப்பிரகாசமய

ங்கினது போலும் சூரியப்பிரகாசத்தினால் பூதவிருளடங்கினது போலும் அறிவாகிய பெருங்கண்ணைமறைத்த ஆணவப்படலம்நீங்கும் அப்போது நாமரூபாத்மகமான சகலதேகாதிப்பிரபஞ்சங்களுந்தனக்குள்ளொடுங்கித் தானேதானா யெதிர்த்துவிளங்கும் இதற்குதாரணம் - அபரோட்சாத்மானுபவதீபிகை - பார்க்கிறவன் பார்க்கிறது பார்க்கப்படுகிறது — மேற்கூறியவைமூன்று மெவ்விடத்திலில்லையோ — மார்க்குமவிடத்திருஷ்டிதான் பண்ணுவதீ தார்க்குஞ்சமதிருஷ்டியாம், என்றிருப்பதிரு பிதுவே பிரமாணம்.

வினா. சகலபிராரத்தபோகங்களிருக்குமென்றும் ஞானம்வந்தாலும் பொசித்துத்தான் றொலைக்கவேண்டுமென்றும் சகலசுருதி ஸ்மிருதிகளுஞ் சொல்லுவதன்றி நமக்குமனுபவமாயிருக்க வஸ்துத்துவமில்லையென்று சொல்லுவதெப்படியெனில்

விடை. பிராரத்தபோகம் அஞ்ஞானதிருஷ்டியினால் அப்பியாசகாலத்திலுண்டு, தத்துவஞான வுதயத்திலில்லையென்றும் அப்பியாசிக்கே பிராரத்தமன்றி ஆரூடனுக்கில்லையென்றுஞ் சுருதிஸ்மிருதிகள் சொல்லுகின்றது நமதநுபவமு மப்படியேயாம்.

வினா. அதெப்படியென்னில்.

விடை. விழித்தவனுக்குச் சொப்பனமசத்தானதுபோல யதார்த்தஞானத்தில் தேகாதிகளசத்தாய்ப் போகிறபடியால் ஆரூடனுக்குப்பிராரத்தமில்லை அவனுக்கு அதீதமாகிய பிரமப்பிரகாசமொன்றுமே யேகமாய்விளங்கும் ஆதலாலந்தச்சொரூபமே நியானென்பதிற் சந்தேகவிபரீதங்களின்றி அத்துவிதசின்மாத்திரமாயிருப்பாயாக இதற்குதாரணம்.

அபரோக்ஷாத்மானுபவதீபிகை - ஞானம்வந்தாலுந்தானே நவில் பிராரத்துவத்தைத் - தானதுபொசித்துத்திர வேண்டுமென்கின்றசாஸ்திரந்-தானுமப்பியாசிக்கன்றித் தத்துவஞானிக்கில்லை- யானதத்துவக்கியான வுதயத்தேபிராரத்தங்கள் * என்றும்—உதயத்தேபிராரத்தம்மென்னொன்றில்லை தேகந்தானு-மதேயசத்தாகையாலுமதெப்படியென்னிற்றுங்கே - ருதயத்தே விழித்தவர்க்குச்சொப்பனமசத்தானாற்போ - லுதயத்தேபிராரத்தங்களொன்றுமான்மாவுக்கில்லை-என்றும் — இல்லையேற்சென்மகன்ம மில்லையோவென்றாலான்மா - வல்லையேஜென்மாகித ராகையாற்சென்மாந்தத்தின்- வல்லமைபிராரத்தத்தால்வருகின்றஜென்மமும்பொய்-யெல்லையிற்றேகஞ்சென்மமாச்சுதேயென்றாற்றேகம்,என்றும் தேகமுமுயற்கொம்பைப்போற் றோர்ந்திடவில்லைகண்டா - யேகவாமாத்துமாவி னிடத்திற்சொப்பனதேகங்க - ளாகவெப்படியரு

